483

Approved by the Text Book Committee, Madras.

# LITERARY SELECTIONS

## FROM TAMIL POETRY AND PROSE.

## Part I.




COMPILED BY

Pandit **N. R. SUBRAMANIA SARMA,**

*A. M. High School,*

*PASUMALAI.*

IMPROVED NEW EDITION.

MADURA:

E. M. GOPALAKRISHNA KONE.

Excelsior Press, Madura.

1925. [Price As. 10.

TB
031 (9)
N25.1
84788

# செந்தமிழ் வாசகத் திரட்டு.

## முதற் பாகம்.

---

பசுமலை அமெரிக்கன் மிஷன் உயர்தர கலாசாலைத்

தலைமைத் தமிழ் ஆசிரியர்,

நெ. ரா. சுப்பிரமணிய சர்மா

தொகுத்தது.




துரைத்தனத்தார் அங்கீகரித்தது.

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

புஸ்தக வியாபாரம், மதுரை.

---

காபி ரைட்] 1925. [விலை அணா 10.

# முகவுரை.

இந்நூல், நமது கலாசாலைகளிற் பயிலும் உயர்தர வகுப்பு மாணவர்களுக்காக யான் புதிதாய் எழுதியிருக்கிற 'செந்தமிழ் வாசகத் திரட்டின் முதற்பாகமாகும் பலவேறு காலங்களில் வசித்த, சிறந்த புலவர்கள் எழுதிய நூல்களினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட பல செய்யுட் பாடங்களும், இக்காலத்தில் எழுதப்பெற்ற உரை நடைப் பாடங்களும், நடையின் போக்குக்கும், பொருளின் தன்மைக்கும் ஏற்றவண்ணம் இதில் அமைக்கப்பட்டுள்ளன.

செய்யுட் பகுதியில், முக்கியமான கதைப்பாகங்களும், ஆன்றோர் அருளிய நீதிச்செய்யுட்களும், படிப்பதற்கு இனிய தனிப் பாடல்களும் இருக்கின்றன. மாணவர்களுக்கு எளிதிற் பொருள் விளங்குமாறு, செய்யுட்களிலுள்ள மிகவும் கடினமான சந்திகள் பிரிக்கப்பட்டும், அவசியமான குறியீடுகள் சேர்க்கப்பெற்றும் அச்சிடப்பட்டுள்ளன.

உரைநடைப் பகுதியிலுள்ள பாடங்களிற்சில இந்நூற்காகவே எழுதப்பட்டன. ஒருவர் எழுதியதையே மாணவர்கள் படித்தலினும், பல ஆசிரியர் எழுதியவற்றைக் கற்றறிந்தால், அவ்வவ்வாசிரியர் எழுதும் முறையும், கருத்துக்களும் மாணவர்க்குப் பழக்கமாகுமெனக் கருதி, ஆன்றோர் எழுதிய நூல்களின் பாகங்களையும் இதிற் சேர்த்துள்ளேன்.

நான் விரும்பியவாறு தமது அருமையும், பெருமையும் வாய்ந்த நூற்பகுதிகளை இங்கு அமைத்துக்கொள்ள அநுமதியளித்த பெருந்தகையாளரின் நன்றியை என்றும் மறவேன்.

இப்புத்தகத்தின் முன்னேற்றங்கருதிக் கூறப்படும் விஷயங்களை வந்தனங்களுடன் ஏற்றுக்கொள்ளக் காத்திருக்கின்றேன்.

நெ. ரா. சுப்பிரமணிய சர்மா.

# பொருள் அடக்கம்.

## செய்யுள் பாகம்.

## வசன பாகம்.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 15 | 19 | யாமென்னுதல் | யாமெண்ணுதல் |
| 94 | 5 | வாயர் | வாளர் |
| 95 | 13 | எங்கானகம் | வெங்கானகம் |

இவை சில பிரதிகளில் மட்டுமே காணப்படும்.

---

# செந்தமிழ் வாசகத் திரட்டு.

## முதற்பாகம்.

### 1. திருவாசகம்.

இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் னென்புருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை உலவுசடை உடையானே! நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவா றன்றேயுன் பேரருளே. (1)

பண்ணார்ந்த மொழிமங்கை பங்கா! நின் ஆளானார்க்
குண்ணார்ந்த ஆரமுதே! உடையானே! அடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாவென்னக்
கண்ணார உய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. (2)

கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்,
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிருமாந் திருந்தேனெம் பெருமானே! அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. (3)

என்பாலைப்பிறப்பறுத்திங்கிமையவர்க்குமறியவொண்ணா
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையும் சிவபெருமான்
அன்பானீ அகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே. (4)

மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே!()

**மாணிக்கவாசகர்.**

## 2. திருவாசகச் சிறப்பு.

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ?
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ?
யாதோ சிறந்த தென்குவீர் ஆயின்,
வேதம் ஓதின், விழிநீர் பெருக்கி
நெஞ்சம்நெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்,
திருவா சகமிங் கொருகால் ஓதின்,
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய,
மெய்மயிர் பொடிப்ப, விதிர்விதிர்ப் பெய்தி,
அன்பர் ஆகுநர் அன்றி,
மன்பதை உலகில், மற்றையர் இலரே. (1)

**சிவப்பிரகாசர்.**

தொல்லை இரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னும் தேன்.

# 3. நைடதம்.

## சுயம்வரப்படலம்.

வெள்ளியம் கிரியின் மேய
விஞ்சையர் இயக்கர் விண்ணோர்
ஒள்ளொளி எறிக்கும் பைம்பொன்
விமானமும் உலகில் வேந்தர்
நள்ளிருள் சீக்கும் செய்ய
நகைமணிக் கொடிஞ்சித் தேரும்
தெள்ளிதின் உணர்ந்து ளோர்க்கும்
தெரிவில மயங்கு மன்றே. (1)

**வந்த யாவரையும் வீமன் வரவேற்றான். யாவரும் சுயம்வர மண்டபம் எய்தினர். இந்திரன் முதலிய நான்கு தேவர்களும் அங்கு வந்திருந்தனர். நளனும் ஆங்குப் போயினன்.**

தெரியல்சூழ் குலவுத் திண்டோள்
சிலைவலான் இனிதின் எய்த,
அரசவை இருந்த செவ்வி
அரசிளங் குமரர் எல்லாம்
குரைகடல் முகட்டில் தோன்றும்
குளிர மதி காண்ட லோடும்
விரிகதிர் மழுங்கு வானின்
மீனினம் என்னல் ஆனார். (2)

இழைசுடர் எறித்த லானும்
இருவிசும் புறையும் வானோர்
பொழிமலர் மிடைத லானும்
பூசல்வண் டிவர்த லானும்
உழைபொரு தடங்கட் பேதை
உருவினைத் தெரியக் காணார்
விழைவொடு நோக்கும் வேந்தர்
விழிநெருக் குற்ற மாதோ.

தோழியுருவுற்று ஆங்கு வந்திருந்த கலைமகள் மன்னவரை இன்னார் இன்னாரென்று கூறிய பிறகு நளனுருக் கொண்டுவந்த நான்கு தேவர்களையும் நளனையும் கூறுகிறாள்.

கலைவளர் திங்கள் என்னக்
கடிகமழ் கமலம் வாட்டும்
திலகவாண் முகத்தாய்! ஈங்கு
வைகிய சினவேற் காளை,
வலனுடை வயிர வாளான்,
கற்பக மலிந்த தோளான்,
பலபகை வரைமுன் செற்ற
பகட்டெழின் மார்பினனே. (4)

நகைமதி முகத்தாய்! ஈங்கு
வைகிய நாம வேலான்,
புகலரும் வெகுளி உள்ளத்
தொருவினன், பொங்கி ஆர்த்த
பகையிருட் பிழம்பு சீக்கும்
பலசுடர் உமிழும் வாளான்,
தகைமைசால் புலவர் ஏத்தும்
தாலமே முடைய கோவே. (5)

அஞ்சனம் எழுதல் ஆற்றா
தம்மவோ என்று நையும்
வஞ்சிநுண் இடையாய்! ஈங்கு
வைகிய நாம வேலான்,
எஞ்சல்இல் தருமன்; தெண்ணீர்
இருங்கடல் உலகம் எல்லாம்
செஞ்சவே ஓசை போய
தீதறு செங்கோல் வேந்தே. (6)

பாற்றிரை அமிர்தம் ஊறும்
படர்ஒளிப் பவளச் செவ்வாய்க்
கோற்றொடி மடந்தை! ஈங்கு
வைகிய குலவுத் தோளான்,
மாற்றரும் சிறப்பின் மிக்க
வளங்கெழு புவன வேந்தன்;
நாற்றிசைப் பரப்பும் சூழ்போம்
நலம்கெழு நேமி வேந்தே. (7)

போதரி நெடுங்கண் நல்லாய்!
பொருசிலை வேனி லானில்
கோதையர் மனமுங் கண்ணும்
கூட்டுணும் குலவுத் தோளான்,
தாதவிழ் கமலப் போது
மலர்ந்தபூம் தடங்கள் தோறும்
மாதர்மென் முகங்கள் காட்டும்
வளம்கெழு நிடத வேந்தே. (8)

கலைமகள் நான்கு தேவர்களையும் கூறும்போது இரட்டுற மொழிந்ததாலும், நிடதன் மாலையில் வண்டுகள் மொய்த்ததாலும், ஊழ்வினை கூட்டுவித்ததாலும் நளனையே நளனெனத் தமயந்தி துணிந்து, அவனுக்கே மாலையிட்டாள்.

## போர்புரி படலம்.

இந்திரன் பொறுமையால் மற்ற அரசர் பாற் கூறுகிறான்.

விரிகதிர்ப் பரிதி முன்னர்
வெண்மதி மழுங்கும் அல்லால்,
பரிதியும் மதியம் தோன்றில்
படர்ஒளி மழுங்கல் உண்டோ?

அரசர்காள்! நீவிர் வெய்யோன்
அருங்குலத் துதித்தும் திங்கள்
மரபின்மன் னவற்கு நுங்கள்
மாண்எழில் மழுங்கி னீரால். (9)

கண்டவர் மனமும் கண்ணும்
கவர்ந்திட வனப்பு வாய்ந்த
ஒண்டொடி மாலை வேய்ந்தோற்
குரியளென் றெண்ண வேண்டாம்;
திண்டிறல் நிடதர் கோமான்
செருவினில் இரியல் போக
மண்டமர் கடந்த ஒள்வேல்
மன்னவர்க் குரியள் என்றான். (10)

என்றலும், கடவுட் டிங்கள்
இருங்குலம் இழித்துக் கூறல்,
நன்றுநன் றென்ன நக்கு,
நாமவேல் வழுதி சீறி,
உன்றலை துணிப்பன் என்னு
ஒளிறுவாள் உறையின் நீக்கிக்
குன்றெறி வயிர ஒள்வாட்
குரிசின்மேற் கனன்று போனான். (11)

வெகுளலை; அணங்கிற் காக
நளனுருக் கொண்டு மேய
அகல்விசும் பளிக்கும் வேந்தன்
இவனென அமரர் கூறத்,
துகளெழ மௌலி பண்டு
தோற்றவன் தன்னோ டென்கொல்
இகலெனப் புகையும் ஒள்வாள்
உறைசெறித் தேகினானே. (12)

இது நிற்க, அரசர்கள் தம் சேனையுடன் நளனை எதிர்த்தார்கள்.

கூன்பிறைக் கோட்டு வல்வில்
குழைத்ததும் குழைத்துத் தெவ்வர்
ஊன்சுவைத் துண்ணும் வாளி
விடுத்தலும் ஒன்ன லார்தம்
கான்படு தெரியல் மார்பம்
போழ்ந்ததும், தெரியக் காணூர்:
வான்படு பிணக்குன் ருேங்கி
வயின்வயின் விளங்கக் கண்டார். (13)

**அரசர் கதி இதுவாதலை உணர்ந்த தேவர் தங்கள் ஸ்வயரூபத்துடன் நளன்பாற் சென்று, போரை நிறுத்தும்படி அவனை வேண்ட, அவன் அங்ஙனமே செய்தான். தேவர்கள் களித்துப் பல வரங்களை அவனுக்குக் கொடுத்தேகினர்.**

## மணம்புரி படலம்.

ஆற்று வேள்வி அருந்தவர் சூழ்வரப்
போற்று நான்மறைக் கோதமன் போர்கெழு
வேற்ற டங்கண் விளங்கிழை மன்றலுக்
கேற்ற யாவையும் கொண்டுடன் எய்தினன். (14)

வேரி யந்தொடை வீமனும் வேந்தரும்
தேரு நான்மறைச் செல்வரும் மன்றலுக்
கோரை எய்திய தென்றுழை ஒற்றரால்
ஆர மார்பற் கறிய உணர்த்தினர். (15)

தண்ணந் தாமரைத் தாக்கணங் கன்னவர்
கண்ணும் நெஞ்சும் உவந்து களிப்புற
எண்ணில் வேதியர் ஆசி இயம்பிட
வண்ண மாமணி மண்டபத் தெய்தினன். (16)

கள்ள ருமலர் நாற்றிஎண் காவதம்
உள்ள கன்ற ஒளிர்மணி மாடத்தின்
பிள்ளை மானிகர் நோக்கியைப் பெய்கழல்
வள்ளலோடும் மணித்தவி சேற்றினர். (17)

கமல மீதுசெங் காந்தள் அலர்ந்தெனக்
குமரன் அங்கையில் கோல்வளை செங்கைவைத்
திமய மாதும் இறைவனும் போலவாழ்ந்
தமைதிர் என்ன அரும்புனல் நல்கினன். (18)

பொங்கு செந்தழல் சூழ்வந்து பூம்பொரி
செங்கை ஆரச் சொரிந்து திருமகள்
பங்க யப்பதம் பைம்பொனின் அம்மிவைத்
தங்கண் வானத் தருந்ததி காட்டினன். (19)

கோதில் நான்மறைக் கோதமன் ஆதியாம்
மாத வத்து முனிவரும் மன்னரும்
காதல் வேலை கரையழிந் தோங்கிட
ஆத ரத்தொடும் ஆசி இயம்பினர். (20)

அதிவீர ராம பாண்டியன்.

---

## 4. நாலடியார்.

காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து. (1)

தான்கெடினும்தக்கார்கே டெண்ணற்க; தன்உடம்பின்
ஊன்கெடினும்உண்ணார்கைத்துண்ணற்க;—வான்கவிந்த
வையகம் எல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல். (2)

முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள;
பின்னரும் பீடழிக்கு நோயுள;—கொன்னே
பரவன்மின்; பற்றன்மின்; பாத்துண்மின்; யாதும்
கரவன்மின்; கைத்துண்டாம் போழ்து. (3)

கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தோர் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ; பண்பிலா
ஈரமி லாளர் தொடர்பு. (4)

ஒருபுடை பாம்பு கொளினும், ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம்—திங்கள்போல்,
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார். (5)

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே ஆகும்;
வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து. (6)

விரிநிற நாகம் விடர்உள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்;
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமை யுடையார் செறின். (7)

தீங்கரும் பீன்ற திரள்கால் உளைஅலரி
தேங்கமழ் நாற்றம் இகழ்ந்தாஅங்—கோங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை இல்லாக் கடை. (8)

யானை அனையவர் நண்பொரீஇ, நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்;—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்; எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். (9)

இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப! களைபவோ
கண்குத்திற் றென்று தங் கை. (10)

ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழிகொம்பின்மேற் செல்லாவாம்—நீர்த்தருவி
தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நாட!
வாழா தார்க் கில்லை தமர்.

கல்லாக் கழிப்பர் தலையாயர்; நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்; கடைகள்
இனிதுண்ணேம் ஆரப் பெறேம்யாம் என்னும்
முனிவினாற் கண்பா டிலர். (12)

**சமண முனிவர்கள்.**

---

## 5. அரிச்சந்திர புராணம்.

நகர் நீங்கிய காண்டம்.

மயிரோடும் சிறகிழந்த போகில்போல்
வேலியொடு வரம் பிழந்த
பயிரேபோல் கரமிழந்த கரியேபோல்
பொறியிழந்த பாவை யேபோல்

உயிரேபோய்ப் பரிதபிக்கும் உடலேபோல்
மத்தால்உள் உடைந்த லம்பும்
தயிரேபோல் தளர்ந்தலேந்து தத்தமக்கு
நிகழ்ந்தவெலாம் சாற்றல் உற்ருர். (1)

கொண்டிருந்த வளநாடும் குறையாத
பெருந்திருவும் கொடித்திண் டேரும்
பண்டிருந்த மாளிகையும் பரிசனமும்
தமக்களித்துப் பால னேடும்
வண்டிருந்த தாரானும் வாணுதலும்
வறியோர்போல் வனத்தே போகக்
கண்டிருந்தும் விலக்காத கௌசிகனர்
தம்மனமும் கல்லோ என்பார். (2)

என்றலமந் தனேவோரும் வயிறலேத்து
விழுந்தேங்கி இரங்கும் காலே,
கன்றிெனுடும் பிடியிெனுடும் கிளேயிெனுடும்
வனம்புகுதும் களிறே போல
இன்றளித்த தருண்முனிவர்க் கேற்றனவோ
ஏற்றிலேயோ என்னு ஏங்கிக்
குன்றனேய மதில்கடந்தே தனிநடந்து
சரயுவினேக் குறுகி னனே. (3)

உரைபெறுநீர் இரவிகுலத் தரசற்கு
வழிவழியே உரிமை ஆய
சரயுவெனும் தாதிஅரிச் சந்திரற்கு
வந்தவினே தானே தென்ன
விரிமலர்த்தாள் பூண்டுகிடந் தரற்றிடவும்
இழிந்தேகி விரைந்து போய்மேல்
கரையணுகி வரிமணலின் விரிமலர்கள்
சொரியுநறும் காவிற் புக்கார். (4)

அச்சோலையில் மன்னன் மணலில் வீற்றிருந்தனன். சூரியன் அஸ்தமித்தான், அக்கால், அரிச்சந்திரன் முதலாயினோர் என்ன சம்பாஷிக்கிறார்கள் என்பதை அறிவதற்காக விசுவாமித்திரர் அச்சோலையின்கண் ஒரு பக்கம் ஒளித்திருந்தார்.

அக்காலத் தமைச்சரெலாம் அடல்வேந்தன்
அடிபோற்றி, அரசே நீமீண்
டெக்காலம் எழுந்தருள்வ தென்றுரைக்க
ஆங்கவரை இருகண் நோக்கி
முக்காலங் களுமுணரும் முனிவனுக்கின்(று)
யான்கொடுத்த மூதூர் தன்னில்
எக்கால மும்வருவ தில்லைஎன்றான்
அமைச்சரெலாம் ஏங்கி வீழ்ந்தார். (5)

இதனைக்கேட்ட விசுவாமித்திரன்,

பொன்கேட்கப் பொன்அளித்தான், புவிகேட்கப்
புவியளித்தான், போதா தென்று
என்கேட்கி னும்தருவ தில்லைஎனும்
புன்மையிவன் இடத்தில் இல்லை;
முன்கேட்ட பொருளாலே மொழிவழுவந்
தெய்துமது முடக்கம் ஆனல்
பின்கேட்டார் இகழ்வார்கள் யாம்பொறுத்தும்
எனநினைந்து பேசல் உற்றான். (6)

ஒன்றுரைக்க நீகேளாய் உண்மைக்கும்
வண்மைக்கும் உரியோய் என்னை
இன்றுரைத்த பிழைபொறுத்தேன்; அழல்வேள்வி
முடித்திடுதற் கிவேன் என்றங்
கன்றுரைத்த பொருளதனை அளிப்பாயோ
அளியாயோ அரச! என்றான்;
என்றுரைத்த கௌசிகனை அடிதொழுது
வாய்புதைத்தாங் கிது ரைப்பான். (7)

உன்னுடனே உரைத்தபொருள் உனக்கடியேன்
உகந்தளித்த உரிமைச் செல்வம்
தன்னுடனே போனதெனு உணர்ந்தேனு
யினுமுனிவால் தருவல் என்றே
நின்னுடனே யானுரைத்த சபதமினி
மாறுவனே நீயாள் விட்டால்
பொன்னுடனே தருவன்என்றுன் புகரோனை
அவனழைத்துப் பொருத்தினுனே. (8)

உள்ளியதீ வினையனைத்தும் தனித்திருத்தி
வகைவகையே உரைத்து நீபோய்
அள்ளியிடும் பொருள்கவரா தானையின்மேற்
கவண்சிலைபோம் அளவும் தந்தால்
கொள்ளுதிநீ; பின்போன கூலியையும்
பெறுதிஎனக் கூறித், தீய
வெள்ளிதனை உடன்கூட்டி மீண்டுமழைத்
தொருவாய்மை விளம்பல் உற்ருன். (9)

துன்றுபசிக் கடருகனி தேடும்போ
தெனக்கினிய சோறு வேண்டும்
என்றுமொழி; தந்திடினும் ஏலாது
வேண்டாஎன்; இவனூண் பெற்ருல்
அன்றுபொருள் தருமுன்உணற் ககலேனில்
லெனத்தடு;நம் அவதி வந்தால்
நின்றவரைக் கரிகுறித்து மறுதினத்தில்
நில்லாமல் நீவா என்ருன். (10)

அடுத்திருத்தி மனங்கலக்கி முனிக்களித்த
மொழிமாறி அளியேன் என்னு
எடுத்துரைக்கில் உன்னரசை யான்வாங்கித்
தருவேன்என்; இசைந்தான் ஆகில்,
தடுத்தழைத்து வருதிநமக் கதுபோதும்
எனப்பலவுஞ் சாற்றிக் கூட்டி
விடுத்தனன்விட் டரசனுக்கு விடைகொடுத்து
மாமுனிவன் மீண்டு போனன். (11)

முனியேக, மன்னவனும் மூரிநெடுஞ்
சேனதனை முனிவன் தன்னே
டினியேகும்; அவர்க்கினியார் எனக்கினியார்
எனஅழுதங் கியாரும் மீண்டார்;
பனியேகு முன்னெழுந்து பைந்தொடியும்
மன்னவனும் பாலன் தானும்
தனியேகக் கண்டமைச்சன் சத்தியகீர்த்
தியுமவர்கள் தம்மிற் சென்ருன். (12)

வழியில் நக்ஷத்திரேசனுல் நேர்ந்த பல துன்பங்களையும் பொறுமையுடன் தாங்கிச் சென்று, காசியை அண்மினர்.

## காசி காண்டம்.

வயலெலாம் செந்நெல்; செந்நெல் மருங்கெலாம் கயல்கள் வாவும்
கயலெலாம் கலவை வாசம், காவெலாம் புயல்கள்; காவிற்
புயலெலாம் புகையே; அந்தப் புகையெலாம் பூழில்; பூழில்
அயலெலாம் ஆரம்; ஆரத் தருகெலாம் தேவ தாரம். (1)

கரும்பினை ஒடித்து மள்ளர் கடாவினை அடிக்கச் சிந்தி
நிரம்பின முத்தம் எங்கும் நீணிலாக் கதிர்ப ரப்பித்
திரும்பின திசைகள்தோறும் திகழ்தலால் செறிந்து பன்மீன்
அரும்பிய வானும் அந்நாட் டசனியும் ஒத்த அன்றே. (2)

இத்தகைய காசிநாட்டிலுள்ள காசியம்பதியில் அரிச்சந்திரன் முதலியோர் புகுந்தார்கள். புகுந்தவர்கள் **விசுவநாத** விமலனை வணங்கி, அன்றிரவு ஒரு பொதுச்சாவடியில் தங்கினார்கள்.

**வேறு.**

ஒருநாள்செல மறுநாளையில் உறுதீவினை நினையா
பொருமால்களி றுடையானொடு, புகரோன்மிக வெகுளா,
முருகார்தொடை முடியாய்! முறை முனிகூறிய பொருள்நீ
தருமாறுள தெனில்இன்றது தருகென்று தடுத்தான். (3)

அதிரப்பெரு கரவத்தொடும் அழல்கட்புகர் பலகால்
முதிரச்சில சுடுகட்டுரை மொழியப்பொருள் தரும்அச்
சதுரெப்படி எனவெய்த்துடல் தளரத்துணை விழிமுத்
துதிரச்சிறி தெதிருத்தரம் உரையாமல் இருந்தான். (4)

மின்னஞ்சிய விடையாய்கதிர் வேலஞ்சிய விழியாய்!
வன்னெஞ்சுடை முனிநம்முடை வளமுள்ளது கொண்டான்
என்னெஞ்சமு முன்னெஞ்சமும் ஒன்றன்றியி ரண்டோ?
உன்னெஞ்சறியாதென்வயின் உளதோபொருள் என்றான்.

கல்லென்றுயர் தோளாய்கெள சிகன்எண்ணுதல்அல்லால்
இல்லென்பதும் உளதென்பதும் யாமெண்ணுதல்தகுமோ
எல்லொன்றினி அவதித்தினம் எனையும்மகனையும்நீ
வில்லென்றனள் கற்புக்கொரு வித்தாகி உதித்தாள். (6)

மெள்ளச்செல, நாணம்செல விரையச்செல வாய்மை
தள்ளப்புதல் வனையும்மயில் தனையும்முன டத்தி
உள்ளத்துயர் அறிவாகிய உரனுலுக விழிநீர்
வெள்ளத்தினை அடையாஇறை விலைகூறி நடந்தான். (7)

தாலத்தறம் உணராதுயிர் தளரும்படி பலசெய்
வேலைப்பழ வினைபற்றிட விற்கின்றனன் வினையேன்
வாலைச்சிறு பருவத்தெனன் மரபிற்புதல் வனையும்
நீலக்கயல் விழியாளையும் நிதியுள்ளவர் கொண்மின். (8)

மண்மின்னென வருமென்மனை வியையும்மக னையும்நீக்
கொண்மின்னென விலைகூறிய கோமான்உரை கேளா
விண்மின்னெனவலையம்புரி வெண்ணூலணி மார்பன்
கண்மின்னொரு மறையோனதி களவோடெதிர்வந்தான் (9)

வந்த அந்தணன், 'சந்திரமதியையும், தேவதாசனையும் பெற எத்துணை பொருள் கொடுக்க வேண்டும்?' என்று வினவ, அரசன் 'யானைமேல் ஏறி நின்று எறியப்படுகின்ற கல் எவ்வளவு உயரம் செல்லுமோ அவ்வளவு பொருள்தான் விலை' என்றான். அம்மறையவன், அரசன் கூறிய பொருள் முழுதையும் கொடுப்பதாகச் சம்மதித்து அப்பொருளைப்பெற இருப்பவனைக்காட்டும்படி கூற; அரசன் தன்னோடுவந்த நக்ஷத்திரனை அழைத்தான். நக்ஷத்திரன் அப்பொருளை ஏற்றுக்கொண்டதாகக் கூறினன். சந்திரமதியும், தேவதாசனும் அவ்வந்தணன் வீட்டுக்குச்செல்ல வேண்டியவர் ஆயினர்.

**வேறு**

வல்லி போற்றி வருந்தல் எமக்கெனச்
சொல்லி வேற்கண் துளிபல சிந்திட,
அல்லி மாமலர்த் தாள்களை அன்புடன்
புல்லி வீழ்ந்து கிடந்து புலம்பினள். (10)

நின்று காணும் நிருபரும் யானும் அன்
றன்று காண அவாவுறு செம்முகம்
இன்று காண்டக வெய்திய தன்றிமற்
றென்று காண்பன் இனிஎன ஏங்கினள். (11)

ஏங்கி மன்னன் இடைவன்என் றேபடர்
தாங்கி, நாயக! தாவிடை என்றயல்
நீங்கி னள்; இறை நீள்கழுத் தைத்தழீஇத்
தூங்கி வாய்விட்டுத் தோன்றல் அரற்றினன். (12)

கழுத்தைப் பூண்டெழும் காதலன் கைகளை
அழுத்த மாம்பற் றறவிடு வித்தனன்
விழித்த கட்பொறி சிந்திட வேதியன்
இழுத்துப் போய்த்தன தில்லிடம் எய்தினன். (13)

அரிச்சந்திரன் ஆற்றெணுத் துயர முற்றான். அமைச்சன் அவனைத் தேற்றினன். பக்கத்திருந்த நக்ஷத்திரனை அரசன் நோக்கி, 'உமது பொருள் கிடைத்ததால் உமக்குத் திருப்திதானே' என்று கேட்டான்.

முனிக்கு முன்னம் மொழிந்தபொன் ஈந்தனை
எனக்குக் கூலிநீ ஈகுவ தென்? என
உனக்கும் ஈகுவன் வாஎன உத்தமன்
தனக்குப் பின்னடந் தான்வினைச் சல்லியன். (14)

பின்பு மன்னன் வீரவாகு என்ற புலையனுக்குத் தன்னை விற்று, கிடைத்தபொருளை அவனுக்குக் கொடுத்தான்.

வீரகவிராயர்.

---

## 6. தனிச் செய்யுட்கள்.

### தமிழ் நாடுகள்.

வேழ முடைத்து மலைநாடு; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து;—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து. (1)

ஔவையார்.

### பாண்டியன் மனைவியைப் பாடியது.

உமையவளும் நீயும் ஒருங்கொப்பே; ஒப்பில்
உமையவளுக் குண்டங்கோர் ஊனம்;—உமையவடன்
பாகம்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான்,பாண்டியனுன்
ஆகம்தோய்ந் தாண்டான் அரசு. (2)

**கம்பர்.**

### விகடராமன் குதிரை.

முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்க,
பின்னே இருந்திரண்டு பேர்தள்ள,—எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
மாதம்போம் காத வழி. (3)

பண்புளருக் கோர்பறவை; பாவத்திற் கோரிலக்கம்.
நண்பில ரைக்கண்டால் நாற்காலி;—திண்புவியை
ஆள்வார் மதுரை அழகியசொக் கர்க்கரவம்
நீள்வா கனநன் னிலம். (4)

**காளமேகப்புலவர்.**

### காட்டுவழியில் நடந்து வருந்தியபோது பாடியது.

குன்றும் குழியும் குறுகி வழிநடப்ப
தென்று விடியுமெமக் கென்கோவே?—ஒன்றும்
கொடாதானைக் கோவென்றும் காவென்றும் கூறில்
இடாதோ நமக்கிவ் இடி. (5)

**இரட்டையர்.**

குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனீங் கில்லை;
குறும்பிஅள வாய்க்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி இல்லை;
இரண்டொன்றாய்முடிந்துதலை இறங்கப்போட்டு

வெட்டுதற்கோ தமிழ்ஒட்டக் கூத்தன் இல்லை;
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ தமிழறியாத் துரைகள் உண்டு;
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே. (6)

**படிக்காசுப்புலவர்.**

மட்டாரும் தென்களந்தைப் படிக்காசன்
உரைத்ததமிழ் வரைந்த எட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்தவ் வெட்டைத்
தொட்டாலும் கைம்மணக்கும் சொன்னாலும்
வாய்மணக்கும் துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினது நளினம் தானே. (7)

**பலபட்டை சொக்கநாதப்புலவர்.**

பாராச் சேவகர் தடுத்தபோது பாடியது.

கருமகுண மிகுமுனது சமுகமுறார்
வறுமையெனச் சலிக்கக் காய்ந்து
வருமிரவி வெயிலதனால் மயங்கியின்றி
யானிங்கு வந்த போழ்தில்
அருமைதவிர் *பாராச்சே வகர்தமது
பெயர்ப்பொருளை அறியக் காட்டிக்
கருவமொடு தடுப்பதென்ன காமர்பொன்னுச்
சாமியெனும் கருணை மாலே. (8)

*பாரா என்றதன் சிலேடைப் பொருளைக் கவனிக்க.

### வேலப்ப துரையின் வேட்டைப் பெருமை.

வெம்புலியும் அம்புலியும் வெண்கயிலை நாதனைவிட்
டம்புவியில் வாராமல் அஞ்சியவால்;—பம்புமொன்னார்
கோட்டையைநீர்த் தூளிசெயும் கோமான்வே லப்பதுரை
வேட்டைதனைக் கண்டு வெருண்டு.

### எலிக்கும் புலிக்கும் சிலேடை.

பாயுங் கடிக்கும் பசுகருவா டும்புசிக்கும்
சாயுங்குன் றிற்றாவிச் சஞ்சரிக்கும்—தூயபுகழ்
தேங்குமுத்து ராமலிங்கச் சேதுபதிப் பாண்டியனே!
வேங்கையொரு சிற்றெலியா மே. (10)

**மாம்பழக் கவிராயர்.**

---

## 7. ஏ ரெ ழு ப து.

### தாற்றுக்கோல் சிறப்பு.

வெங்கோபக் கலிகடந்த வேளாளர் விளைவயலுள்
பைங்கோலை முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்;
பொங்கோதைக்கடற்றானைப் போர்வேந்தர்நடத்துபெரும்
செங்கோலை நடத்துங்கோல் ஏர்அடிக்கும் சிறுகோலே. (1)

### உழவு எருத்தின் சிறப்பு.

வானமழை பொழிந்தாலும் வளம்படுவ தெவராலே?
ஞானமறை யவர்வேள்வி நலம்பெறுவ தெவராலே?
சேனைகொடு பொருமன்னர் செருக்களத்திற் செகுக்குமத
யானைவலி எவராலே இவர்எருத்தின் வலியாலே. (2)

### உழவு எருத்தின் சூவல் கறைச் சிறப்பு.

கண்ணுதலோன் தனதுதிருக் கண்டத்திற் படிந்தகறை
விண்ணவரை அமுதூட்டி விளங்குகின்ற கறைஎன்பார்;
மண்ணவரை அமுதூட்டி வானுலகம் காப்பதுவும்
எண்ணருஞ்சீர்ப் பெருக்காளர் எருதுசுவ லிடுகறையே. (3)

### ஏர்நடத்தற் சிறப்பு.

கார்நடக்கும்; படிநடக்கும்; காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனிற்புகழ்சால் இயல்இசைநா டகம்நடக்கும்
சீர்நடக்கும்; திறனடக்கும் திருஅறத்தின் செயனடக்கும்;
பார்நடக்கும்; படைநடக்கும்; பசிநடக்க மாட்டாதே. (4)

### உழவின் சிறப்பு.

அலகிலா மறைவிளங்கும்; அந்தண ராகுதிவிளங்கும்;
பலகலையாம் தொகைவிளங்கும்; பாவலர்தம் பாவிளங்கும்;
மலர்குலாம்திருவிளங்கும்; மழைவிளங்கும்; மனுவிளங்கும்;
உலகெலாம் ஒளிவிளங்கும்; உழவர்உழும் உழவாலே. (5)

கம்பர்.

---

## 8. சோமேசர் முதுமொழி வெண்பா.

### அறன்வலியுறுத்தல்.

தக்கனூர் வேள்வித் தவத்தைமேற் கொண்டிருந்தும்
தொக்கஅற மாயிற்றே சோமேசா—மிக்க
அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம். (1)

### அன்புடைமை.

தோன்று வகைகரந்தும் தோன்றலைகண் டுண்ணெகிழ்ந்து
தோன்றநின்றான் முன்புநளன் சோமேசா-தோன்றுகின்ற
அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். (2)

### கொல்லாமை.

வேந்துமகற் றேர்க்கால் விடவஞ்சி மந்திரிதான்
சோர்ந்துதன தாவிவிட்டான் சோமேசா-ஆய்ந்துணர்ந்து
தன்னுயிர் நீப்பினும் செய்யற்க, தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (3)

### கல்லாமை.

மெய்த்ததிரு வள்ளுவனார் வென்றுயர்ந்தார் கல்விநலம்
துய்த்தசங்கத் தார்தோற்றார் சோமேசா—உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு. (4)

### வினைத்திட்பம்.

செவ்வேளைப் பாலனென எள்ளித் திறலழிந்தான்
துவ்வாத வெஞ்சூரன் சோமேசா—அவ்வா
றுருவுகண் டெள்ளாமை வேண்டும்;உருள்பெருந்தேர்க்(கு)
அச்சாணி அன்னார் உடைத்து. (5)

### பகைத்திறம் தெரிதல்.

நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்
சுந்தரஞ்சேர் தென்களத்தூர் சோமேசா—சந்ததமும்
வில்லேர்உழவர்பகை கொள்ளினும், கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை. (6)

பெரியாரைப் பிழையாமை.

கொன்படைகள் நீறுகக் கோசிகனுர் சாபத்தால்
துன்பமுற்றுர் நால்வேந்தர் சோமேசா—இன்புதவும்
ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். (7)

சான்ருண்மை.

வன்மைச் சுயோதனற்கும் வானேர் சிறைமீட்டான்
தொன்மைநெறித்தருமன்சோமேசா—பன்முறையும்
இன்னுசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு ? (8)

நல்குரவு.

நற்றருமன் வெற்றியினை நாடி விராடனெதிர்
சொற்றமொழிசோர்ந்ததேசோமேசா—கற்றறிவால்
நற்பொருணன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். (9)

கயமை.

ஏற்ற துரோணனையன் றெள்ளித் துருபதன்பின்
தோற்றுவிசயற்களித்தான்சோமேசா-போற்றிடினும்
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு. (10)

சிவஞானசுவாமிகள்

---

## 9. மதுரை மாநகர்.

தாய்மொழியாகிய தமிழினை மறந்து செல்வப் பொருள் ஈட்டலிலேயே காலம் போக்கியுழலும் மதுரையாகிய தாம் பிறந்த நகர்க்கிரங்கி ஆற்றாது பாடியது.

மதுரைமா நகரே! மதுரைமா நகரே!
செல்வப் பொருளே சிறப்புடைப் பொருளென
ஒல்வகை உண்மை உணர்கிலை கொண்டனை
அதனை ஆக்கு விதமறிந் தவற்றில்
தலைப்பட் டுழலும் தனிப்பெரு நகரே!
நிலைபட் டிருக்கும் நீர்மைஎய் தினையோ?
நினைக்குறித் தந்தோ நினைக்கும் தோறும்
துன்ப மிகுந்து சோரும் என்உளம்!
நின்னிற் பிரிந்து நெடுங்கலை கற்பேன்
சென்னை போந்தும் சிறியேன் உள்ளம்
பன்னாள் சென்றும் பிரிந்துநிற் காண
வேட்கை மேவி விரைந்தாண்டு தோறும்
இருமதி நின்வயின் இருந்தேன் அம்ம!நீ
உயர்நிலை தவறி நயமெலாம் தொலைந்து
வீழ்நிலை உற்றனை! மேதக்க மதுராய்!
எவன்கொலோ இவ்வா றவநிலை எய்தினை?
நச்சிப் பாண்டியர் மெச்சி வளர்த்த
சங்கமி ருந்து பொங்கிய நன்னகர்
மதுரைஎன் றான்றோர் வகுத்துக் கூறிய
தெதிர்நிலை இலக்கணை என்பது பற்றியோ?
ஆல வாயின் அவிர்சடைக் கடவுளை
ஏலவா தித்த இன்றமிழ்க் கீரன்.

வந்தவ தரித்த மதுரையும் நீகொலோ?
நால்வர் குரவரும் மேல்வகைத் தமிழில்
பண்ணிசைப்பாட்டில் பரிந்து புகழ்ந்த
மண்ணில்விண் நகரெனும் மதுரையும் நீகொலோ?
செந்தமிழ்ப் பாற்கடல் புந்திமத் தாற்கடைந்
தாட்பொரு ளாகிய தட்பநல் அமுதை
உரையெனத் தந்த நரைமூ தாளர்
அந்தண குலத்தின் விந்தையில் தோன்றி
அன்னோர் பற்றிய இன்னாப் பழமொழி
'போலி யுரை'எனச் சால விளக்கிய
உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியர்
மாண்புட னிருந்த மதுரையும் நீகொலோ?
*வழுதிமன் னவர்தம் வளங்கெழு நகரே!
அழிநிலை அடையா தெழுதி; துயிலுதல்
ஒழிதி; தமிழ்நிலை விழிகொடு காண்டி;
அவளிசைத் தேறல் செவியாய்ப் பருகுதி;
நந்தலில் இன்பம சிந்தையிற் பெறுதி;
என்னோ சொற்றேன் என்ன எண்ணலை.
அருந்தமிழ்த் தாயின் திருந்திய அன்பினால்
சிறியேன் இத்துணை நெறியெனக் கூறினேன்;
என்னை வெகுளலை; என்னன் பதனை
வேண்டும் எனினீ வெகுள்க மற்றுச்
'சொல்வன்மை உண்டெனிற் சொன்னே விடுத்திடல்
நல்வினை கோறலின் வேறன்' றென்ன
உரைத்த புலவனு முளனால் தமரே
எனினு மவர்பிழை இனிதெடுத் துரைத்தல்
கடனே அன்றோ! கழறாய். அன்றியும்,
நின்பால் எனக்குள அன்பால் யானுரை
செய்த இதனைநீ நொய்தெனக் கருதி
வாளா காலம் போக்கலை மதுராய்!
மீளாய் தமிழ்நலம் விரும்பியுய் வாயென.

**வி. கோ சூரியநாராயண சாஸ்திரி.**

---

* இவ்வரி புதிதாய்ச் சேர்க்கப்பட்டது.

## 10. * நளனைக் கலி தொடர்தல்.

புஷ்கரன் விரும்பியபடி நளன் மதிமந்திரிகள் மறுப்பதையும் கேளாமல், அவனுடன் சூதாடி நாடுநகர முதலிய யாவற்றையும் தோற்றான்.

மென்கால் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்கூகம் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினான் அன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து. (1)

சந்தக் கழல்தா மரையும் சதங்கையணி
பைந்தளிரும் நோவப் பதைத் துருகி—எந்தாய்!
வடந்தோய் களிற்றாய்! வழியான தெல்லாம்
கடந்தோமோ'' என்றார் கலுழ்ந்து. (2)

தூயதன் மக்கள் துயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வழிநோக்கி—யாதும்
தெரியாது சித்திரம்போல் நின்றிட்டான் செம்மை
புரிவான் துயரால் புலர்ந்து. (3)

'காதல் இருவரையும் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேதம் உடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்!
வீமன் திருநகர்க்கே மீள்' என்றான் விண்ணவர்முன்
தாமம் புனைவானைத் தான். (4)

'குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே!
கோக்கா தலனைக் குலமகளுக்' கென்றுரைத்தாள்
நோக்கால் மழைபொழியா நொந்து. (5)

---

* இப்பாடத்திலும், அடுத்த பாடத்திலுமுள்ள செய்யுள்கள் **நளவெண்பா, நைடதம்** என்ற இரண்டு நூல்களினின்றும் தேர்ந்தெடுக்கப்பெற்றன.

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர். (6)

சொன்ன கலையின் துறையனைத்தும் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் சோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.' (7)

என்றான் நளன். தமயந்தி, நளனைத்தன் தந்தை வீட்டிற்கு வருமாறு அழைத்தனள்.

'சினக்கதிர்வேல் கண்மடவாய்! செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னும் இம்மாற்றம் கண்டாய்—தனக்குரிய
தானம் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானம் துடைப்பதோர் வாள்.' (8)

என்றான் நளன்.

'செங்கோலாய்! உன்றன் திருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்பன் எழினகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருள்' என்றாள் காதலருக்
கேதிலரைப் போல எடுத்து. (9)

'பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—தாதைக்குக்
காட்டுநீ' என்றான் கலங்காத உள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து. (10)

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி—'எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ' வென்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீ ரழுது. (11)

இருவ ருயிரும் இருகையால் வாங்கி
ஒருவன்கொண் டேகுவான் ஒத்து—வருமறையோன்
கோமைந்த ணேடிளைய கோதையைக்கொண் டேகினன்
விம னகர்க்கே விரைந்து. (12)

தேன்பிடிக்கும் தண்டுழாய்ச் செங்கண் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்—தான்பிடிக்கப்
'பொற்புள்ளைப் பற்றித்தா' என்ருள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது. (13)

கூந்தல் இளங்குயி லுங் கோமானும் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—'வேந்தனே!
நன்னுடு தோற்பித்தோன் நானேகாண்' என்றதே
பொன்னுடு மாநிறத்த புள். (14)

'நிய வனமுந் துயின்று திசை துயின்று
பேயும் துயின்றதால் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேல் துயில்கை கடன்' என்ருன் கைகொடுத்து
மண்மேல் திருமேனி வைத்து. (15)

தமயந்தி அயர்ந்து தூங்கினள்.

காரிகைதன் வெந்துயரம் காணுமல் நீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோர் ஆடை
அரிதற் கவனினைத்தான் ஆங்கு. (16)

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான் அரிந்திட் டவணிலைமை நெஞ்சிற்
றெரிந்தான் இருந்தான் திகைத்து. (17)

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். (18)

திக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் செல்கின்றேன் யான். (19)

தமயந்தி புலம்பல்.

நீடிய துயில்சிறி துணர்ந்து நேரிழை
ஆடகத் தொடிக்கையா லணைக்கக் காண்கிலாள்
ஊடினள் பதைத்தனள் உயிர்ப்பு வீங்கினள்
தேடினள் காந்தளஞ் செங்கை நீட்டியே. (20)

கான்றூர் உயிரொழுகக் கண்ணீர் கவுளலைப்ப
ஊன்றேய் கணைபட் டுழலும் பிணையொத்தேன்
மான்றேர் அரசர் முடியுழுத வார்கழற்கால்
தோன்றுலென் கண்களிப்ப வின்னமுமென் தோன்றிலையே. (21)

நேரலார் போரேறே! நிடதத்தார் கோமானே!
ஆரவரை மார்பா! அளியேன் உயிர்க்குயிரே!
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்
சாரலையால் இன்னும் இதுவோநின் தண்ணளியே. (22)

ஞாலத் திருணடப்ப நாட்கமல வாய்நெகிழ
வேலைத் திரைமுகட்டில் வெய்யோன் எழுந்தனனல்
மாலைக்கதிர் வடிவேல் மன்னர் பெருமானே!
காலைக் கடவ கடன்கழிக்க வாராயே. (23)

வாவும் இளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்!
கூவுங்கரிய குயில்காள்! மென் புள்ளினங்காள்!
ஆவியென மேவி அகலேம் எனவகன்ற
காவலன்தான் போன வழியெனக்குக் காட்டீரே. (24)

என்னு வுருகி இருகண்ணீர் ஆலியுகத்
தன்னுத் தழும்பப் புலம்பித் தமியளாய்
மின்னுர் இடைநுடங்கச் செல்வாள் விறல்வேந்தன்
பொன்னுர் அடிநோக்கிப் பூங்கொடிபோய் வீழ்ந்தழுதாள். (25)

### வீமன், நள தமயந்தியரைத் தேடவிடல்.

தமயந்தியைப் பிரிந்த நளன் கார்க்கோடகன் என்னும் அரவால் கடிபட்டு வேற்றுருவமைந்து அயோத்தி அரசனுகிய இருதுபன்னனிடம் பாகனுக அமர்ந்திருந்தான்.

இனையனுகிய மன்னவன் இவ்வழி யிருப்ப,
வனைகருங்கழல் விதர்ப்பர்கோன் மறையவர்க் கூய்'என்
தனையை தன்னெடு நளனையும் தேடிநீர் தந்தால்
நினைவ யாவையும் தருகுவன்' என அவர் நேர்ந்தார். (26)

தரங்க வாரிதி சூழ்தரு தகைமைசால் உலகம்
ஒருங்கு தேடியும் காண்கிலர் உலப்பிலார் திரிய
வரங்கொள்கேள்வியன் சுவேதனென் றுரைக்குமோர் மறையோன்
கருங்கட்பேதையைச் சேதிபன் மனைவயிற் கண்டான். (27)

### சேதிமன்னனது தாயிடம் சுவேதன் கூறுகின்முன்.

'மாது கேட்டிஇம் மடவரல் விதர்ப்பர்கோன் புதல்வி
காத னுயகன் நிடதர்கோன் காசினி முழுதும்
சூதி னுலிழந் திவளையுங் கானிடைத் துறந்தான்
ஆதலாலிவட் டேடென விதர்ப்பர்கோன்அறைந்தான். ()

இன்னள் என்றெனை உணர்வதன் முன்னமும் ஈன்ற
அன்னை யாமென அளித்தனை அன்புமீ தூர
மன்னும் என்னுயிர் மக்களைக் காண்பதற் கெந்தை
பொன்னகர்க்கெனை விடுத்தியென் றின்னுரை புகன்றுள. (29)

மக்கள் வாண்முகம் நோக்கிய மடவரல் நெஞ்சம்
நெக்கு வாடுதல் கண்டநல் தாயுளம் நெகிழ்ந்து
சக்கு செந்தழற் காலவேற் காதலற் குறுகி
'நக்க பூங்கழல் நளனையும் தேடுகெ'ன் றுரைத்தாள். (30)

ஓட ரிக்கணாள் உரைத்தலும் ஒற்றரைக் கூவி
ஆட கப்பசும் பொலன்கழல் நளனைநீர் ஆய்ந்து
தேடி வம்மினென் றரசர்கோன் திசைதொறும் செலுத்த
நாடி னாரவர் நளிகடல் வரைப்பெலாம் நடந்தே. (31)

அந்தணன் அயோத்தியில் தேடல்.

மின்னெடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினான்—மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
அடைந்தான் அயோத்தி நகர். (32)

'கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதூஉம் வேந்தர்க்குப் போதுமோ—தா'னென்று
சாற்றினான் அந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தான் எதிர். (33)

'ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனே காண்—தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறேல் நீ. (34)

'வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கின் அவனல்லன்—பூக்கமழுங்
கூந்தலாய்! மற்றக் குலப்பாகன், என்றுரைத்தான்
ஏந்துநூல் மார்பன் எடுத்து. (35)

என்றுரைத்த அந்தணனுக்கு வேண்டியனவழங்கி இருதுபன்னனிடம் கூறுமாறு சிலவார்த்தைகள் சொல்லியனுப்பினாள்.

## 11. நளன் திருப்ப அரசாட்சி அடைதல்.

'நாட்டம் மூன்றுடை நாயகன் வரத்தினு னங்கை
மீட்டுங் கன்னிகை ஆயினள் சுயம்வரம் விழைந்தாள்
கேட்டு மாநிலக் கிழவரும் அவ்வுழி இறுத்தார்
பூட்டு வார்சிலை மன்ன!நீ போதியேற் போவாய். (1)

நாளை நன்மணம் புணர்வது, நீடதநா டளிக்கும்
காளை யாருயிர் உளன்கொலோ? கழிந்தனன் கொல்லோ?
ஆளி மொய்ம்பினுய்! என்றுநீ அறை' கென அறைந்தாள்;
வாளை வென்றரி பரந்தமை தோய்ந்தகண் மடவாள். (2)

'தளரு நுண்ணிடைத் தமயந்தி சுயம்வரம்நாளை
உளைவ யப்பசும் புரவியின் உள்ளமோர்ந் தனையேல்,
தெளியும் கேள்வியாய்! விரையினிற் செலுத்துகதேர்' என்
றளிமு ரன்றுபைந் தேனுகர் தாரினுன் அறைந்தான். (3)

கேட்ட வாகுகன் 'கிளியென மிழற்றுதீங் கிளவி
காட்டுள் நீத்தது நினைத்தனள் ஆயினும் கற்பு
நாட்டு கின்றவள் இத்திறம் புரியுமோ! நம்மைக்
கூட்டுதற்கிஃ திழைத்தனள் ஆ'மெனக் குறித்தான். (4)

நொறில்வ யப்பரித் தேர்பண்ணி நொய்தினிற் கொணரா
'தெறுவ லித்தடந் தோளினுய்! தேர்மிசை இவரின்
நறுமலர்ப்பசும் பூந்தொடை விதர்ப்பகோன் நாட்டில்
உறுவல் இப்பகல் கழிவதன் முன்' என உரைத்தான். (5)

முத்த வெண்குடை வேந்தர்கோன் முழவுறழ் தடந்தோள்
உத்த ரீயமங் நெறியிடை வீழ்தலு முணர்ந்து
'தத்து வாம்பரி நிறுவியத் துகில்தரு' கென்னப்
'பத்து யோசனை கடந்தது தே'ரெனப் பகர்ந்தான். (6)

தான்றி மாமரம் தோன்றலும், தேரினைத் தகைத்துத்
தோன்று மிம்மரத் திலைகளும் தொக்கமென் பழனும்
மூன்று கோடியே முப்பதிற் றிரண்டென மொழிய
ஆன்ற கேள்வியோன் எண்ணியற் றமெென வியந்தான். (7)

'இனைய விஞ்சைமற் றெனக்குநீ அளித்தனை என்னில்
துனைவ யப்பரி உளமுணர் விஞ்சையான் சொல்வன்;
வனைபொ லன்கழல் மணிமுடி மன்ன!' என் றுரைப்ப
அனைய விஞ்சையை வாகுகற் களித்தனன் அன்றே. (8)

இருது பன்னனவ் விஞ்சையை வாகுகற் கிய
மருவி நின்றனன் கலிதனாங் தேகிவா ளரவ
மெரிசெய் வெவ்விடம் கான்றலின் இதயநெக்குருகி
வெருவி வாய்விடா விடத்தினை உமிழ்ந்தனன் அன்றே. (9)

விதர்ப்பபுரியை அடைந்த வாகுகனிடம் தமயந்தி தன் தோழியை அனுப்பினள். தோழி அவன்பாற் போய் 'நீயார்? எத்தொழிலில் வல்லவன்? இங்கெதற்காக வந்தாய்?' என்று கேட்டாள்.

'விரிம லர்க்குழல் தமயந்தி சுயம்வரம் வேட்ட
இருது பன்னன்மா தேர்விடும் வாகுகன் என்பேர்;
புரிவல் வெந்தழல் இன்றியும் மடைத்தொழில்; புனலற்
றருகுபானையில் நீம்புனல் தருவல்' என் றுரைத்தான். (10)

அழலு நீருமின்றமிழ்தென அடுதொழில் கேட்டுக்
குழையு நெஞ்சினள் இன்னுயிர்க் கொழுநனென் றெண்ணி
விழைவி னோடுதன் மக்களை அவனுழை விடுத்தாள்
மழலைமென்மொழி மக்களு மன்னன்மாட்டடைந்தார் (11)

அடைந்த மக்களைக் காண்டலும் அழலிடு மெழுகின்
உடைந்த துள்ளநீர் ஊற்றிருந் தொழுகின நெடுங்கண்;
தொடர்ந்த மும்மல முருக்கிவெம் பவக்கடல் தொலையக்
கடந்து ளோர்களும் கடப்பரோ மக்கண் மேற் காதல். (12)

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—'மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க' ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன். (13)

'மன்னன் கிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவனேச—இந்நகர்க்கே
வாழ்கின்றேம் எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான்' என்றார் அழுது. (14)

'உங்கள் அரசொருவன் ஆளநீர் ஓடிப்போந்
திங்கண் உறைதல் இழுக்கன்றோ?—செங்கை
வளவரசே!' என்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து. (15)

'நெஞ்சாலிம் மாற்றம் நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்னர் அடுமடையா!—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலாய்! எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி. (16)

'எந்தை கழலிணையில் எம்மருங்கும காணலாம்
கந்து சுளியும் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியில் தேய்ந்த வடு.' (17)

என்றனர்.

'மன்னர் பெருமை மடையர் அறிவரோ
வுன்னை யறியா துரைசெய்த—என்னை
முனிந்தருளல்' என்று முடிசாய்ந்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண். (18)

மழலைமென்மொழி மக்களைக் காண்டலும் மன்னன்
அழுது துன்புறல் ஆய்வளைத் தோழிகண் டேகித்
தொழுது சொற்றலும் கொழுநனும் என்பது துணிந்து
முழுவ லன்புடைத் தாயொடு தந்தைபால் மொழிந்தாள். ()

மழைத்த டங்கணள், 'மன்னவன் பணியினல் வேந்தை
அழைத்து வம்' மென ஆய்வளைத் தோழியை விடுப்பக்
குழைத்த பூங்கொடி அன்னவள் வாகுவற் குறுகித்
தழைத்த காதலால் வருகென மன்னனும் சார்ந்தான். (20)

'முன்னை நல்லுருக் காட்' டென முற்றிழை மொழியப்
பன்ன கத்திறை உதவிய பூந்துகில் பரிவால்
மன்னர் ஏறனன் புனைதலும் மாணுரு வெய்திக்
கன்னல் வேளினும் கவினலம் கனிந்திட நின்றான். (21)

மண்க ளித்தது; மாதிரம் களித்தன; மலர்மேல்
பெண்க ளித்தனள்; பேரறம் களித்தன கண்டோர்
கண்க ளித்தன; களித்தன கலைவல்லோர் நெஞ்சம்
விண்க ளித்தன; களித்தது வீமன்மா நகரம். (22)

மழைம தக்களி யானையும் கலினவாம் பரியும்
செழும ணித்தடந் தேர்களும் வயவரும் செறிய
எழுக டற்புவி மன்னரும் இறைஞ்சினர் செல்ல
அழலு யிர்க்கும்வேல் அரசனும் நிடதநா டடைந்தான். (23)

மூதெயிற்புறத் திறுத்தபின் மொய்யமர் தொடங்கப்
போதல் செய்கவெம் போர்த்தொழிற் கஞ்சினையாகில்,
காத லிற்கவ ருடுவான் வருகெனக் கழறித்
தூது போக்கினன் புட்கரன் தனக்குவேல் தோன்றல். (24)

அன்ன வாறியைந் தாடலும் புட்கரன் தோற்ப,
மன்ன முன்னநீ வென்றதுங் கொடுங்கலி வயத்தால்
நின்ன தாருயிர் நேர்ந்தனன் எம்பியா தலினல்
தொன்ன கர்க்கினி தே' கெனப் பணித்தனன் தோன்றல்()

ஆழி சூழ்புவி முழுவதும் ஆழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிந்தரு மகம்பல ஆற்றிச்
சூழி மால்வரைப் பிடருறு சுமையொழிந் தாறப்
பாழி யம்புயத் தலகெலாம் பரித்தினி திருந்தான். (26)

---

## 12. நீதிநெறிவிளக்கம்.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும்; கல்வியின் ஊங்கில்லை:
சிற்றுயிர்க் குற்ற துணை. (1)

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்-மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு. (2)

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று. (3)

கல்வி உடைமை பொருளுடைமை என்றிரண்டு
செல்வமும் செல்வம் எனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். (4)

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல், தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை அன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை அன்றே நலம்? (5)

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. (6)

கண்ணோக் கரும்பா, நகைமுகமே நாண்மலரா,
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு? (7)

உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலும் கரி. (8)

மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண் துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்;—செவ்வி
அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்;
கருமமே கண்ணாயி னார். (9)

கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமும் உண்டாயின் இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு. (10)

**குமரகுருபர சுவாமிகள்.**

## 13. தண்டலையார் சதகம்.

**பன்றிபல குட்டிகளைப் பயந்தாலும்**
**யானை பயந்தும் ஒருகுட்டிக் கீடாகாது.**

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலும் குலமுழுது
நன்மை உண்டாம்.
அன்றியறி வில்லாத பிள்ளையொரு நூறுபெற்றும்
ஆவ துண்டோ?
மன்றினடம் புரிவாரே! தண்டலையா ரே!சொன்னேன்
வருடந் தோறும்
பன்றிபல ஈன்றுமென்ன? குஞ்சரமொன் றீன்றதனாற்
பயனுண் டாமே. (1)

**நாய்க்குத் தெரியுமோ ஒருசந்திப் பானை?**

தாயறிவாள் மகளருமை தண்டலைநீள் நெறிநாதர்
தாமே தந்தை
ஆயறிவார் எமதருமை பரவையிடம் தூதுசென்ற
தறிந்தி டாரோ?
பேயறிவார் முழுமூடர் தமிழருமை அறிவாரோ
பேசு வாரோ?
நாயறியா தொருசந்திச் சட்டிபா னையினந்த
நியாயம் தானே. (2)

**எட்டிபழுத்தும் ஈயார் வாழ்ந்தும் பயன் என்ன?**

கட்டுமாங் கனிவாழைக் கனிபலவின் கனிகளுப
காரமாகும்;
சிட்டருமவ்வணங்தேடும் பொருளெல்லாம்இரப்பவர்க்கே
செலுத்தி வாழ்வார்;

மட்டிலவும் சடையாரே! தண்டலையாரே! சொன்னேன்
வனங்கள் தோறும்
எட்டிமரம் பழுத்தாலும் ஈயாதார் வாழ்ந்தாலும்
என்னுண் டாமே. (3)

## குருடனுக்குக் குருடன் கோல் பிடிப்பது.

அருள்மிகுத்த ஆகமநூல் படித்தறியார்; கேள்வியையும்
அறியார்; முன்னே
இருவினையின் பயனறியார், குருக்களென்றே உபதேசம்
எவர்க்கும் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீள் நெறியாரே! அவர்கிரியா
மார்க்கம் எல்லாம்,
குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி காட்டிவரும்
கொள்கைதானே. (4)

## காற்றுள்ள போதே தூற்றிக்கொள்.

நேற்றுள்ளார் இன்றிருக்கை நிச்சயமோ? ஆதலினல்
நினைந்த போதே
ஊற்றுள்ள பொருளுதவி அறந்தேடி வைப்பதறி
வுடமை அன்றோ?
கூற்றுள்ள மலையவரும் தண்டலையா ரே!சொன்னேன்
குடபால் வீசும்
காற்றுள்ள போதெவரும் தூற்றிக்கொள் வதுநல்ல
கருமம்தானே. (5)

## தன்வினை தன்னைச்சுடும்; ஓட்டு அப்பம் வீட்டைச்சுடும்.

மண்ணுலகிற் பிறர்குடியை வஞ்சனையிற் கெடுப்பதற்கு
மனதி னலே
உன்னிடினும்,உரைத்திடினும்,அவன்றனே கெடுவனென்ப
துண்மை அன்றோ?

தென்னவன்சோ ழன்பணியும் தண்டலைநீள் நெறியாரே!
தெரிந்து செய்யும்
தன்வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட் டைச்சுடவும்
தான்கண் டோமே. (6)

**எய்தவனிருக்க அம்பு என்ன செய்யும்?**

வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம் வந்திடினும்
வம்பு கோடி
செய்திடினும் தண்டலைநீள் நெறியார்தம் செயலென்றே
தெளிவ தல்லால்,
மெய்தவிர அவர்செய்தார் இவர்செய்தார் எனநாடி
வெறுக்க லாமோ?
எய்தவர்தம் அருகிருக்க அம்பைநொந்த கருமமென்ன
இயம்பு வீரே. (7)

**அற்பநுக்கு வாழ்வுவந்தால் அர்த்த ராத்திரி குடை பிடிப்பர்.**

விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக் கண்ணோட்டம்
மிகவும் செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தால், கண்தெரியா திருமாந்து
துன்பம் செய்வார்
பற்பலர்க்கு வாழ்வுதரும் கண்டலையா ரேசொன்னேன்
பண்பில் லாத
அற்பருக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத் திரிகுடைமேல்
ஆகும் தானே. (8)

**பிச்சைச் சோற்றுக்குப் பேச்சில்லை.**

கற்றவர்க்குக் கோபம்இல்லை; கடந்தவர்க்குச் சாதியில்லை, கருணை கூர்ந்த
நற்றவர்க்கு விருப்பமில்லை; நல்லவர்க் கொருகாலும் நரகம் இல்லை;
கொற்றவர்க் கடிமைஇல்லை; தண்டலையார் மலர்ப்பாதம் கும்பிட் டேத்தப்
பெற்றவர்க்குப் பிறப்பில்லை; பிச்சைச்சோற் றினுக்கில்லை பேச்சுத் தானே. (9)

**பனங்காட்டு நரி சலசலப்புக் கஞ்சாது.**

புனங்காட்டு மண்ணும் விண்ணும் அஞ்சவரும் காலனையும் போடா என்றே
இனங்காட்டு மார்க்கண்டன் கடிந்துபதி னறுவய தென்றும் பெற்றான்
அனங்காட்டு தண்டலையார் அடியார்எல் லாமொருவர்க் கஞ்சு வாரோ?
பனங்காட்டு நரிதானும் சலசலப்புக் கொருநாளும் பயப்ப டாதே. (10)

**படிக்காசுப் புலவர்.**

---

# 14. ஸ்ரீமத் பாகவத புராணம்.

## கஜேந்திர அத்தியாயம்.

உரைக்கு மோசனை ஒன்பதி னாயிர முயர்ந்து
தரைக்குமேன்மையாய் வெள்ளிபொன் இரும்பெனச்சாற்றும்
நிரைக்கும் பூங்கதிர்க் கொடுமுடி நிகரின்மூன் றாகி
வரைக்கெ லாம்வர மாந்திரி கூடமால் வரையே. (1)

கந்த மாமலர்ச் சண்பகம் கற்பகஞ் செயலை
சந்த மேமுத லாமரத் தடம்பொழில் தவழ்ந்து
மந்த மாருதம் வந்துவந் திழுகுற வயங்கும்
அந்த மால்வரை வளன்வழுத் துதற்கெளி தன்றால். (2)

**வேறு.**

இன்னன வளத்தின் ஓங்கி இலகுறு திரிகூடத்தின்
பின்னுமங்கிரும்பின்வண்ணப் பெருங்குவ லெவல்போலத்
துன்னியகரிகட்கெல்லாம்சொல்லுமோர்பெருவேந்தென்ன
மன்னிய பிடிகள் சூழ வயங்குமோர் களிறு மாதோ. (3)

தன்னைச் சார்ந்த பிடிகளோடு ஒரு தடாகத்தில் சென்று வழக்கமாய்ப் புனலாடி வந்தது.

மருவினை யாடு மந்தண் மரைமலர் பறித்து வீசி
விரிபுன லாடும் எல்வை வெஞ்சின இடங்கர் கவ்விப்
பெரியபோர்க்களிற்றைஈர்ப்பப் பிடிக்குலம் தடக்கை நீட்டிக்
கரையின்மீ தீர்ப்ப வும்போர்க் கரியிவர்ந் திலது மாதோ.

பிடிக்குலம் கலங்கி ஈர்க்கும் பெருவலி தொலைந்து மாழ்கத்
தடத்திடை இடங்கர் ஈர்ப்பச் சார்கரை வேழ மீர்த்து
விடற்கரு வலத்தினோடும் வெந்திறற் சினத்தி னோடும்
அடற்கருங் கொடிய போராண் டாயிரம் அடர்த்ததன்றே.

வாரணம் ஆற்றலோய்ந்து வானுறத் தடக்கை நீட்டிப்
பூரண உலக மெல்லாம் பூத்தளித் தழித்து நின்ற
காரண பரமா னந்தக் கடலிடைக் குளிப்போர் நெஞ்சம்
ஆரண முடிவு மேய அமலவோ என்ற ரற்றும். (6)

வேத்நூல் ஒருங்கு ணர்ந்து விரியுமெய் அறிஞர் உள்ளப்
போதுசேர்சோதிபொன்னிற்பொலியொளிபோலவெங்கும்
தீதுரு தருளின் யார்க்கும் தெரிவுரு துறைந்து நின்ற
ஆதிகா ரணன்வந் தின்னே அளிக்கவென் றழைத்ததன்றே

அழைத்தது செவியிற் கேட்டும் அயனரன் ஆதி யாயோர்
புழைக்கைவெங் கரிமுன் காப்பப் புகுந்திலர் ஆதியாகித்
தழைத்தகாரணனேஎன்ற தனிப்பெயர்ப்பொருள்யாமல்லேம்
இழைத்தகாரியம்யாம்ஆவேம்என்செய்துமாலின்றென்றார்.

கூப்பிடு குரல்கேட்டோடிக் கொழுமணிச்சுடிகை நெற்றிப்
பாப்பணை அகற்றி வெய்ய படர்சிறைக் கலுழ னூர்ந்து
தீப்பொழிந் திலங்கு கூர்வாய்த் திகிரிகைத் தாங்கி யாவும்
காப்பவன் பிறைவெண் கோட்டுக் களிற்றுமுன் எய்துற்றானல்.

எறிசுடர் விரிக்கும் நேமி எறிந்தனன் எறித லோடும்
பிறைபுரை எயிற்றுப் போழ்வாய் பிளந்துவெவ் விடங்கர் துஞ்சி
அறைதரு சாபந் தன்னால் அடைந்ததவ் வுருவு நீத்து
விறலுடை யூகூ என்னும் விஞ்சையன் ஆயிற்றன்றே. (10)

விழுமிய இசைநூல் தேர்ந்த விஞ்சையன் ஆயவன்னோன்
பழமறை முதலிபாதம் பழிச்சினன் பதியிற் போயான்
அழிவறு தவத்தின் மிக்க அகத்தியன் சாபந் தீர்ந்து
மழைமதக் களிறு மாயன் வரம்பில்வீ டுற்ற தம்மா. (11)

கரும்புயல்வண்ணத்தெம்மான் கமலைபார்மடந்தைஎன்னும்
மருந்துறழ் மொழியார் கொண்கன் மாய்வில்லை குந்த மேயான்
அருந்தவ முனிவன் சாப மடைந்துவேல் அரச னங்கோர்
பெருங்களி றாய காதை பேசுதும் கேட்டி மாதோ. (12)

பைந்தமிழ் நாடு காக்கும் பாண்டியன் பரிதி வைவேல்
இந்திரத் துய்மன் என்போ னிணர்ப்பொலஞ் சுண்ணம் தோய்ந்த
மந்தமா ருதநின் றூடு மாலைவெள் அருவிச்சாரற்
சந்தனப் பொருப்பின் மாயன் தாளிணை வழிபட் டானல்.

குடங்கையி னிவந்த வண்ட கோளமூ டுருவ விந்த
நெடுங்கிரி அடக்கி நெஞ்சு நெருப்புறழ் அவுணர் மாளத்
தடந்திரைச் சலதி உண்ட சதுமறை முனிவந் தெய்த
அடங்கலர்ச் செகுத்தகூர்வாள் அரசனுங் கெழுந்திலானல்.

இமிழ்இருள் சுவற்றும் வேலான் எழுந்திலன் இருந்தான் என்னுத்
தமிழ்விளை தண்ணஞ் சாரல் தடவரை முனிச பிப்பக்
கமழ்கடாக் கலுழி தூங்கும் கருங்கவுள் வேழம் ஆகி
உமிழ்கனல் திகிரி மாயன் உலைவில்வீ டுற்று னன்றே. (15)

**சேவ்வை சூடுவார்.**

---

## 15 தாயுமானவர் பாடல்.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய என்னுயிர் நாதனே!
உன்னை நாடுவன் உன்னருள் தூவெளி
தன்னை நாடுவன் தன்னந் தனியனே. (1)

தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றெனை நின்னிடத் தேதந்தேன்;
இன்னம் என்னை இடருறக் கூட்டினல்
பின்னை உய்கிலன் பேதையன் ஆவியே. (2)

ஆவி யேஉனை யானறி வாய்நின்று
சேவி யேன்களச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுளப் பான்மையைக் கண்டுநீ
கூவி யாளெனை யாட்கொண்ட கோலமே. (3)

கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனோ?
ஆல முண்டும் அமிர்தரு வாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே. (4)

காணும் கண்ணிற் கலந்தகண் ணேயுனைச்
சேணும் பாரும் திரிபவர் காண்பரோ?
ஆணும் பெண்ணும் அதுவெனும் பான்மையும்
பூணும் கோலும் பொருந்தியுள் நிற்கவே. (5)

நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றோரருள்
வர்க்க மின்றி மனிதரன் றேஐயா!
துற்கு ணக்கடற் சோங்கனன் பாவியேற்
கெற்கு ணங்கண் டெனபெயர் சொல்வதே. (6)

சொல்லை உன்னித் துடித்தத லாலருள்
எல்லை உன்னி எனையங்கு வைத்திலேன்
வல்லை நீயென்னை வாவென்றி டாவிடின்
கல்லை யாமிக் கருமி நடக்கையே. (7)

கையும் மெய்யும் கருத்துக் கிசையவே
ஐய! தந்ததற் கையம் இனியுண்டோ?
பொய்ய னேன்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்பம் என்றும் விளைவதே. (8)

என்று முன்னை இதய வெளிக்குளே
தோன்ற வைத்தன னேயருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்
நன்று தீதற வைத்த நடுவதே. (9)

வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னொருள் பெற்றும் திடமிலேன்
சித்த மோன சிவசின்ம யானந்தம்
வைத்த ஐய! அருட்செம்பொற் சோதியே. (10)

செம்பொன் மேனிச் செழுஞ்சுடரே! முழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்;
நம்பி வாவெனின் நானென்கொல் செய்வதே. (11)

செய்யும் செய்கையும் சிந்திக்கும் சிந்தையும்
ஐய! நின்னதென் றெண்ணும் அறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேனென்ன புன்மையே. (12)

புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கும் அருவருப் பல்லவோ?
என்பொ லாமணி யே! இறை யே! இத்தால்
துன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே. (13)

இல்லை உண்டென் றெவர்பக்க மாயினும்
சொல்ல வோவறி யாத தொழும்பன்யான்
செல்ல வேறொரு திக்கறியேன் எலாம்
வல்ல நீஎனை வாழ்விக்க வேண்டுமே. (14)

வேண்டும் சீரருள் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ?
ஆண்ட நீயுன் அடியவ னென்று
தூண்டு வேனன்றித் தொண்டனென்சொல்வதே. (15)

# வசன பாகம்.

## 1. புகழேந்திப் புலவர்.

'வெண்பாவிற் புகழேந்தி' என்று கற்றறிந்தோரால் கொண்டாடப் பெற்ற புகழேந்திப் புலவருடைய சரித்திரத்தைப் பலர் பலவாறாகக் கூறியுள்ளார். அவர்களுள் புலவர் புராணம் என்னும் செய்யுள் நூலாசிரியராகிய முருகதாசர் கூறியதைப் பெரும்பாலும் ஆதாரமாகக்கொண்டு, இது எழுதப்பெற்றது.

கன்னற்பாகுபோன்ற நம் தமிழ் மொழியைக் கற்றவர்களுடைய கண்களை யொத்தவரும், விஷ்ணுபக்திமேலிட்டவருமாகிய புகழேந்திப்புலவர், * பாண்டிவள நாட்டில் வேளாள குலத்திற் பிறந்தவரென்ப. இளமைப் பருவத்தில் அரிய பல தமிழ் நூல்களைக் கற்றறிந்ததுமன்றி, வெண்பாப் பாடுவதில் புலியென உலகத்தாரால் கொண்டாடப் பெற்றவர். இவருடைய சிறப்பைக் கேள்வியுற்ற † பாண்டியன், இவரைத்தனது ஆஸ்தானவித்துவானுமாறு வேண்ட, இவரும் அவ்வண்ணமே உடன்பட்டனர். இவர் இங்ஙனம் இருந்த காலத்தில் அரசன்பால் பரிசில் பெறவரும் இயற்றமிழ் வாணருக்குப் பெரிதும் இதமளித்து வந்தனர்.

மக்கள் சூதாடுதலின் தீமையை உணர்ந்துய்யுமாறு நளசரித்திரத்தை வெண்பா யாப்பில் இவர் பாடிமுடித்தனர். இவருடைய கவிநலனைக் கண்ட ஔவையார், இவரைப், 'பொய்ப் புலவர்க்கெல்லாம் புலியேறு போல்பவர்' என்று சிறப்பித்துப் புகழ்ந்தனர். இவர் கல்விப்பெருக்கன்றி ஏனைய நற்குணங்கள் பெரிதும் வாய்க்கப்பெற்றவர்.

---

* இவர் தொண்டை மண்டலத்திற் பிறந்தவர் என வேறு நூல்கள் கூறும். † இவன் பெயர் செண்பகமாறன் என்பர்.

இவரே அக்காலத்துள்ள பாண்டியன் மகளுக்குத் தமிழைக் கற்பித்து, அவளைப் பண்டிதையாக்கினர். இக்காரணம் பற்றி அவ்வரசிளங்குமரி இவர்பால் தன் தந்தையினும் சத மடங்கு அதிகமான அன்புபாராட்டி வந்தனள். அப்புலவரும் அவள்பால் தான் தவமியற்றிப் பெற்ற தனையையினும் சதமடங்கு அதிகமான அன்பு பாராட்டி வந்தனர்.

பொன்னிநாடாளும் புரவலனும் குலோத்துங்கசோழன் என்பவன் அப்பாண்டியன் மகளை மணம் புரிந்துகொண்டு, தன்னாட்டிற்கு அழைத்துச்சென்றனன். சிறிதுகாலங்கழிந்ததும், அவளைப் பார்த்துவரல் வேண்டுமென்ற எண்ணம் புகழேந்தியார்க் குதிக்கவே, அவர் வேம்பன்பால் விடைபெற்றுச்சென்று, சோழராஜதானியையடைந்தனர். அவர் அங்ஙனம் வருதலை ஒட்டக்கூத்தர் உணர்ந்தார். கூத்தர் என்ற அந்தச் செந்தமிழ் நாவலர் அக்குலோத்துங்கனுக்கு ஆசிரியராவார். புகழேந்தியாருடைய வருகையால் தனது தலைமை குன்றிப்போமென்று கருதி, அவரை எதிர்சென்றழைத்து, 'நாவலீர்! இன்று அடியேன் அகத்தில் இருக்க வேண்டும்' என்று கூறினர். கூறவே, புகழேந்தியார் அவர் வேண்டுகோட்கிணங்க, அவர் அழைத்துச்சென்று, அவருடையகாலில் பொன்விலங்கிட்டுப் புறத்திலுள்ளார் எவரும் அறியாமல் மாதர்கள் வாழுமிடத்துய்த்து, அவரை அன்போடு நடத்திவருமாறு பணித்தார். பிறகு ஒவ்வொரு நாளும் அவரிருக்குமிடஞ்சென்று, கூத்தர் குசலப்பிரசனம் செய்து வந்தார். இப்புலவர்பெருமானுக்கு இவ்விதிவருமென்று எவர் அறிவார்! பாவம்! பாவம்!! தன் மகளைப் போற்கருதிய அவ்வரசிளங்குமரிகூறும் மதுரமொழிகளைக்

கேட்டு மகிழ்ந்து, செம்பியன்சபையில் வீற்றிருக்கச்சிந்தித் திருந்த புகழேந்தியார் ஈண்டு ஊழ்வினைப்பயனால் சிறைப் பட்டது மிகுந்த ஆச்சரியமே.

புகழேந்திப்புலவர் அங்ஙனம் வதிகையில், பாரதத் தின் சில கதைகளை, அல்லி அரசாணிமாலை, பவளக்கோடி மாலை முதலிய நூல்களாகச், சொற்சுவை பொருட்சுவை தோன்ற யாத்து, அவ்வூர் மாதரெல்லாரும் கேட்டுக்களிக் கும்படி கூறினர். அவர் கூறியன யாவும் மாதர் நிறையினை விளக்கி, அவர் இன்புறும் வண்ணம் இயற்கை நலம் வாய்ந் திருந்ததனால், அவர்கள் அப்புலவரைப் பெரிதும் உபசரித் தனர். புகழேந்தியார் வருத்தம் சிறிதுமின்றிச் சிறையி லிருப்பினும், தமக்குநேர்ந்த அவமானத்தைஎண்ணிவருந்தி அதை நீக்குமாறு திருமாலின் திருவடிகளைத் தமது மனத் தில் தியானித்த வண்ணமே இருந்தனர்.

தன்னுடைய குருவாகிய ஒட்டக்கூத்தருடைய துணை யடிகளை மணிமுடிதரித்த சிரமேற்கொண்டு, வருடத்தில் ஒருமுறை குலோத்துங்கன் பவனிவருதல் வழக்கம். அங் ஙனமே அவ்வாண்டிலும் வருவதைப் பெண்கள் சொல்லக் கேட்ட புகழேந்திப்புலவர், சில இதமான வார்த்தைகளைக் கூறி, தாம் அப்பவனியைக்காண உதவிபுரியுமாறு அம்மா தர்களிடம் குறையிரந்துவேண்டினர். வஞ்சமடவார்நெஞ்ச மிசையின் உலகத்தில் யாதுதான் புரியார்! 'அஞ்சன்மின் அங்ஙனமே செய்தும்' என்று அப்புலவர்க் குரைத்தனர். அவர்கள்யாவரும் ஒன்றுகூடிக் கால்விலங்குடனிருந்த அப் புலவரை அரசன் பவனிவரும் தெருவருகி லழைத்துச் சென்று, அவரை ஒரு அவரைப் பந்தலிலிருத்திப் பார்ப் பதற்கு இரண்டு துவாரங்களிடப்பட்டிருந்த ஒரு சட்டியை

அவருடைய தலையில் கவிழ்த்தனர். புகழேந்தியார் தமக் கிதம்புரியுமாறு முதலைவாய்ப்பட்ட அந்தக் கஜேந்திரனும், பிரகலாதனும், திரௌபதையும் தியானித்த திருமாலின் இரண்டு பாதங்களைத் தமது மனத்தமைத்திருந்தனர்.

அன்றிரவு, பலவித வாத்தியகோஷத்துடன் சோழன் யானையின்மீதேறிப் புறப்பட்டனன். அவ்யானை புகழேந்தி யாரிருந்த அவரைப் பந்தரருகிற் சென்றவுடன், யாது காரணத்தாலோ, மலைபோலசையாது நின்றது. அங்கிருந்தவர் யாவரும் கைகொட்டிச்சிரித்தனர். அதனைக்கண்ணுற்றவள வன், வியப்பும், பயமும், நாணமும், சினமும் ஒரு சேரத் தோன்ற, அங்கிருந்தாரை வாளா விருக்கும்படி ஆக்ஞா பித்து, நீங்கள்செய்த நகைப்புக்குக்காரணம் யாதெனவின வினன். அதற்கவர்கள் "ஏந்தலே! நின்யானையின்மீது கவி கை மிளிர்தலைக் கண்டுதான் சிரித்தோம். 'அற்பர் அர்த்த ராத்திரியிற் குடைபிடிப்பர்' என்பதன்றோ பழமொழி?" என்றனர். உடனே அரசர் 'தேவர்கள் செல்லும் பவனிக் காயின் இது பொருந்தும், நமக்கிச்செயல் தகாது' என் றெண்ணித் தன்திருமுடியில் திருவடிசூட்டியாண்டதிப்பிய குரவனை நோக்கித் "தேவர் அனையர் புலவர்; ஆதலால்யான் இரவிற் குடை கொண்டதற்குத் தக்க காரணம் கூறுக" என்றுரைத்தனன். உடனே கூத்தர் பாட முயன்றனர். இதனையறிந்த திருமால் தனதன்பனைச் சிறையினின்றும் வெளியேற்றக் கருதித் தன் மருகியாகிய கலைமகளைக் கூத்த ருக்குதவாதவாறு திருவுளம் கொள்ள, அவ்வம்மையார் சொல்லும், பொருளும் கொடுத்துதவாமையால், கூத்தர் பாடவியலாது வாளாவிருந்தனர். இதனையறிந்த ஆங்குள்ள அனைவரும் அவரை அவமதித்தனர்.

அவரைப் பந்தரின்கண் தங்கி, பக்தவத்ஸலனைத் துதித்துக் கொண்டிருந்த புகழேந்திப்புலவர், அங்கிருந்தார் யாவரும் தெள்ளிதின் உணருமாறு இனியசொற்சுவை, பொருட்சுவை செறிந்த ஒரு கவியை விரைய இசைத்தனர்.

அண்டமீ துலவும் அருந்ததி என்னும்
அருந்திறல் கற்பினுள் உன்னைக்
கண்டதால் ஊறு படவொணு தென்னக்
கருதிநீ கங்குலில் கவிகை
கொண்டது முறைதான் குலோத்துங்கா வெனவே
கூறுமக் கவிதையின் பொருளாம்
மண்டனைப் புரப்போர் மாதரார் பண்பை
வளர்த்தலும் கடமையாம் அன்றே.

அதனைக்கேட்ட சோழன், உடனே அவருடைய விலங்குகளைக் களைந்து, ஒட்டக்கூத்தரோடு அவரையும் யானைமேலேற்றிப் பவனி போந்தனன். கூத்தர் பாடற்கு இயலாதவராய் நின்றவுடன் அவரைப்பந்தலிலிருந்து அமிழ்தினும் இனியகவி வெளிப்படுவதைக்கண்டு, சிலர் ஆண்டுள்ள பொம்மை பாடிற்றென்றும், வேறுசிலர் வேறு விதமாயும் கூறியதை எடுத்துரைக்க யாராலாகும்? பவனி முடிந்ததும் சோழன் யானையினின்று இறங்கித் தன்கோயில் புக்கனன்.

நிகழ்ந்தவற்றையெல்லாம் கேள்வியுற்ற அரசி, தன் நாயகன் செய்யும் அரசியல் வழுவால் இத்தகைய குற்றம் நிகழ்ந்ததென்று அறிந்து அரமனையின் பொற்கதவைச் சாத்தித் தன்கையால் தாழிட்டனள்.

புகழேந்தியாரைச் சிறைப்படுத்தியதால் தன்னரசி இங்ஙனம் செய்தனளென்று தேறியசோழன், சிறிதுநேரம்

மனங்கவன்று இதற்கெல்லாம் காரணமாயிருந்த அக்கூத்தரை விளித்து, அரசியின் கோபம் தணியுமாறு கவி பாடும்படி கூற, அவர்,

*இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்திழையே!
குழையொன் றிரண்டு விழியணங் கே!கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகை மானு பரணனின் வாசல்வந்தால்
பிழையொன் றிரண்டு பொருரோ குடியிற் பிறந்தவரே

என்று மொழிந்தனர். இதனைக்கேட்ட அவ்வணங்கனையாள், 'கூத்தரே! உமது சாதிச்சுபாவத்தால், இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை' என்று கூறினீர். இது நிற்க; வருந்தி நிற்கும் எனது உருவழகை நீர் பலபடப் புகழ்ந்து விளித்தது முறையோ? 'கொண்ட கோபந்தணி' என்று நீர் கூறியது அருவருக்கத்தக்கதே. 'மழைக்கை மானுபரணன்' என்ற இச்சொற்றொடர் இம்மன்னன் ஒருவனைத்தான் குறிக்குமா அல்லது பிறர்க்குஞ் செல்லுமா? அரசன் பிழையை நான் பொறுப்பது உம்மைக்கேட்டுத் தானோ? அந்தோ! பெரும்போர் விளையத்தக்க தீங்கை இழைத்துவிட்டீர்" என்று மனக்குள்ளிருந்தபடியே கூறி விட்டு "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்" என்று மற்றொரு தாழையும் சடக்கென இட்டனள்.

இங்ஙனமாகியசெய்கையால்போர்விளையுமென்று தன்னரசி கூறியதை அரசன் நன்கு ஆராய்ந்து, தன் புலவற்கு விலங்கிட்டதை எண்ணிப்பாண்டியன் சினந்தால் என் ஆம் என்னும் குறிப்பையேஅவள்உணர்த்திய தாய்மனத்தமைத்

* இச்செய்யுளைப புகழேந்தியார் கூறினர் என்று பிறர் கூறுவர்.

துக் கொண்டு, புகழேந்திப் புலவரைப் [1]பார்த்து 'புலவீர்! நம்மறையன் புதல்வி சினந்தணியும்வண்ணம் ஒருகவிபுகல வேண்டு மெனப்' பணிக்க, அக்கணமே புகழேந்தியார்,

நானே இனியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனே! கபாடம் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய இரவி குலாதிபன் வாயில்வந்தால்
தானே திறக்குநின் கைத்தல மாகிய தாமரையே

எனக் கூறியதைப் பாண்டியன் புதல்வி, புனிற்றாவின் குரலைக் கேட்டுச் சென்ற கன்றெனக் கதவின் புறத்துச் சென்று,'இப்புலவர்பெருமான் என்கையைத் தாமரையாக உருவகஞ் செய்துளார். இங்ஙனம் உருவகஞ் செய்திருத்தலாற் கடைத்திறத்தில் இன்றியமையாததாகும். ஏனெனில் இரவி குலாதிபன் வந்தவிடத்துக் கைத்தலமாகிய தாமரை கதவைத் திறக்க வேண்டும். திறவாவிடின் தாமரையாகஉருவகஞ் செய்தது பயனன்றி ஒழியும். அன்றியும், இங்ஙனம் கூறிய உள்ளுறைப் பொருளால் நற்குலத்துதிக்காத நங்கை இவளாமென்று கண்டோர் கூறும் இழிதகைமையும் நேரு மெனக்கூறிச்செய்யுளிற்செறிந்துள்ள நுண்பொருள் நலத்தைத் தெள்ளிதினுணர்ந்து கதவைத்திறந்து,அவரை நமஸ்கரித்து நிற்க, அப்புலவர், 'மகளே! எனக்குச் சம்பவித்த கேட்டிற்காக நீவருந்தாதே. விதியை விலக்க எவராலும் முடியாததாலால், நான் அதன்பயனை அநுபவித்தே தீர வேண்டும்' என்று கூறித் தேற்றினர். பிறகு வளவனால் உபசரிக்கப்பெற்று, அவன் குறித்த இல்லத்தமைந்தனர். கூத்தரோ தமதிருப்பிடம் சென்று,கவலையில் ஆழ்ந்திருந்தனர். பொன்னி நாடனும், அவன்றன் பொற்புடையரசியும்

[1] இச்செய்யுளை ஒட்டகூத்தர் பாடினரெனப் பிறர் கூறுவர்.

கோயிலின்கண் தனித்திருக்குங்காலத்து மதிநுட்பநூலோடுடைய புகழேந்தியாருக்கு நிகழ்ந்த துன்பினைக்குறித்துக் கவன்று இத்தீச்செயலைக் கூத்தர்பொறுமைகொண்டு இயற்றினர் என்று அறிந்தும், அவர் கல்விப் பெருமை முதலியவற்றைக் கருதி, வாளாவிட்டனர்.

பின்பு, அவ் விருபுலவரையும் குலோத்துங்கன் தன் சபைக்கு நாடோறும் வரும்படி பணித்து, கூத்தருக்குத் தனது வலப்பக்கத்தும் புகழேந்தியார்க்கு வாமபாகத்தும் ஆதனங்கள் அமைத்திருந்தனன். அவ்விருவரும் கலத்தலிலாக் கருத்தினரேனும்,கவிச்சுவையளவில் கலந்திருந்தனர். குலோத்துங்கன் கூத்தர்பால் தமிழ்கற்றவனாதலால், புகழேந்தியாருடைய கல்வித்திறமையை நன்கறிந்திருந்தனன். ஆதலாலவரைப் பாண்டியநாட்டிற்குத் திரும்பவிடுத்தற்கு அவனுக்குச் சம்மதமில்லை நெடுங்காலம் புகழேந்தியார் சோழன்பாலேயிருந்ததால், சீதனப்புலவர் என்று பலர் அவரைக்கூறினர். அவர் அங்ஙனமிருக்கையில் ஒருநாள் ஒற்றர்ஓடிவந்து. பட்டத்துயானை மதங்கொண்டு நிகளத்தை முறித்து ஓடுகின்ற தென்றுரைக்கக் கூத்தர்,

> இன்னம் கலிங்கத் திகல்வேந்தர் உண்டென்றோ
> தென்னன் தமிழ்நாட்டைச் சீறியோ?—சென்னி
> அகளங்கா! உன்றன் அயிரா வதத்தின்
> நிகளங்கால் விட்ட நினைவு.

என்றொரு செய்யுளிசைத்தனர்; இதனைக்கேட்டபுகழேந்தியார், தாம்பாண்டியனிடம்கொண்டபேரபிமானத்தானும், கூத்தரினும் நயம்படப் பாடவேண்டுமென்ற கருத்தானும்,

தென்னவன் தென்னர் பெருமான் திறல்மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாலிக்கும் வேந்தா மபய குலன்மகளிர்
தாலிக்கும் ஒன்றே தளை.

என்ற செய்யுளைச் செப்பினர். புகழேந்தியாரின் கவித்திற முதலியவற்றை அறிந்த சோழன், அன்றுமுதல் அவ்விரு புலவர் ஆதனங்களையும் மாற்றி இட்டனன் என்பர். அதாவது, புகழேந்தியார்க்கு வலப்பக்கமும், ஒட்டக்கூத்தர்க்கு இடப்பக்கமும் தவிசிட்டனன் என்பதாம்.

ஒரு சமயம் செம்பியன் அவ்விரு செந்தமிழ வாணருடன் தன்னகர வீதிகளில் கால்நடையாக உலாவச்சென்றனன். ஒரு தெருத்திண்ணையில் ஔவையார் தமதிரண்டு கால்களையும் நீட்டி, உட்கார்ந்து கொண்டிருந்தவர், சோழனைக் கண்ணுற்று, ஒருகாலை மடக்கினர்; புகழேந்தியார் எதிர்ப்பட தமதிரண்டு கால்களையும்மடக்கி அவருக்கு மரியாதை செய்தனர்; கூத்தரைக்கண்டு இரண்டு கால்களையும் நீட்டினர். ஔவையாருடைய செய்கையைக்கண்டு மட்டற்ற சீற்றங்கொண்ட கூத்தர் 'கிழவி! நீ இங்ஙனம் என்னை அவமதித்தற்குக் காரணம் என்னை?' என்று வினவ, ஔவையார், 'அரசனுதலால் அவனுக்கு ஒருகாலும்,கல்விக்கடலை நிலைகண்டுணர்ந்த புகழேந்தியார்க் கிரண்டுகாலும் மடக்கி மரியாதை புரிந்தேன். நீ இவ்விருவர் தன்மையில் எதுவும் அடையப் பெருதவனுதலால்,உன்னைக்கண்டதும் இருகால்களையும் நீட்டினேன்'' என்றுசொல்லி "நீ சிறந்த பாவலனுல் சோழனையும், சோணுட்டையும் சிறப்பித்துச் சந்திரனைக் குறிக்கும் பதத்தை ஒரு செய்யுளின் ஈற்றடியில்

மும்முறை வரும் வண்ணம் பாடு'' என்று கூறினர். கூத்தர் அங்ஙனமே பாடினர். பாடியபாட்டில் மதி என்றமொழி இரண்டிடத்து மட்டும் வந்திருந்தது. தமிழ் மூதாட்டி அவரை நோக்கி, 'உன்பாவில் ஒருமதி கெட்டாய்'' என்று சிலேடையாக "ஒட்டா! ஒருமதி கெட்டாய்'' என்று சொல்லி விட்டுப், புகழேந்தியாரை நோக்கிப் "புலவரே! நீ விரும் பாடுக'' என, அவர் பிறை என்றபதம் மூன்று முறை வரும்படியாகப் பாட, ஔவையார் அவ்விருவர் திறனையும் அரசனறிய உணர்த்தினர் என்பர்.

அக்காலத்தில் அவர்வாழும் ஊரில்வாழ்ந்த வாணிபப் பெண்ணொருத்தி அவ்விருபுலவரினும் புகழேந்தியாரை மதித்தும், கூத்தரை அவமதித்தும் வந்தாள்; கூத்தர் இதனைச் சோழனிடம் கூறினர். அம்மன்னன் அவளை அழைப்பித்து, "நீயேனிவ்வாறு செய்யத்துணிந்தனை?'' என்று வினவ, அவள் "அரசரேறே! உமது குடைக்குள் அடங்காதன இரண்டுண்டு, அவை இவையென்று இயம்பும் ஆற்றலுடையானை யானறிவேன். இவ்விருவரில் யார் கூறுவரோ அவரே யாவராலும் மதிக்கத்தக்கவர் என்றெண்ணுக'' என்று கூறிவிட்டுச் சென்றனள். உடனே புரவலன் அவ்விரு புலவரையும் பார்த்து 'இவ்வுலகத்தில் எனதுகுடைக்குள் அடங்காமலிருக்கும் இரண்டு எவை?' எனக் கூத்தர் வாய்திறவாதிருக்கப் புகழேந்தியார், "செம்பியரே! உலகத்தில் எங்கும் பரவி நின்று நிழல்புரியும் குடைக்கீழ் உலகமுழுவதும் பரந்து கிடந்த உமது கீர்த்தியும், மாற்றலராம் மன்னவருடைய தலைகளைத் துணிக்கும் உமது புஜங்களின் வலிமையை வியக்கும் மடவார் மனவெழுச்சியும் அடங்காதன ஆம்'' என்ற கருத்தடங்கிய ஒருபாவை யாவரும் அறியப் பொருக்கெனப் புகன்றனர்.

புகழேந்திப் புலவருடைய கல்வித்திறமையைக் கூத்த ரினும் அதிகமாய் அறிந்தவர் வேறொருவருமில்லை. ஆயி னும் புறத்தேமட்டும் வித்துவக் காய்ச்சலால் அவரைப் புகழாதிருந்தனர். அதைப்பற்றிப் புகழேந்தியாருக்கு மனக்கொதிப்பு மிகுதியாயிருந்தது. ஒருநாள் கூத்தரோடு வாதாட வேண்டுமென்ற எண்ணத்தோடு, புகழேந்தியார் அவர் வீட்டின் ஒருபால் ஒளிந்திருந்தனர். அச்சமயம் அவருடைய மனைவி அட்டபாலிற் சர்க்கரையையிட்டுக் கொணர்ந்து 'கொஞ்சம் பால் அருந்துக' என்று கூறிய அளவில், அவர், 'செல்லும் நாளில் கூழும் உட்செல்லும்' உட்செல்லாத காலத்தில் புகழேந்திப்புலவருடைய வெண் பாவின் சுவையைப் பிழிந்துண்டாலும் உட்புகாது' என்று மொழிந்தனர். அடுத்திருந்து இவ்வார்த்தைகளைச் செவி யுற்ற புகழேந்திப்புலவர் 'கூத்தரே! இவ்வார்த்தைகளை உமதுவாயாரக் கேட்கயான் எத்தவஞ்செய்தேன்!' என்று கூறி, அவரைத் தழுவிக்கொண்டு, பல மெய்ம்மொழிகளை மனக்களிப்பொடு மொழிந்து இன்புற்றிருந்தனர்.

---

## 11. திருக்குற்றுலம்.

இது தென்னிந்தியாவின் தெற்கோரத்ததான திருநெல் வேலி ஜில்லாவின் மேற்கிலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலை களின் ஒருபகுதியாகிய பொதியமலைத்தொடர்பைச் சார்ந்த திரிகூடாசலத்தின் அடிவாரத்திலுள்ள பிரசித்திபெற்ற ஓர் யாத்திரை ஸ்தலம். "திரிகூடாசலம்'' என்பதன் பொருள், மூன்று சிகரங்கள் வரிசையாயிருக்கும் மலை என்பதாம்.

இத்தலத்துக்குப் பெருமையையும் அழகையுங்கொடுத்துக் கொண்டிருப்பவை எவையெனின், பசுமையான செடி கொடிகளாலும், கனிதரும் முதுமரக்காடுகளாலும் மூடப்பட்டிருக்கின்ற மலையும், அந்த மலையின் சார்பில் தரையை அடுத்து அமுததாரைபோல் வீழ்ந்துகொண் டிருக்கின்ற அருவியும் அவ்வருவியின் மேற்படிந்து, தட்பமுஞ், சாந்தமுங்கொண்டு, மெல்லென வெளிவந்துலாவும் மந்தமாருதமும், அம்மாருதத்தோடு அருவி நீர்த்துளிகளும் வந்து அழகு செய்கின்ற வீதிகளையுடையதும், ஸ்ரீ குற்றால மகா லிங்கமூர்த்தி எழுந்தருளி விளங்குவதுமான அற்புதாலயமும், அவ்வாலயத்தைச் சூழ்ந்து பெரிதும், சிறிதுமாய் விளங்கிக் கொண்டிருக்கும் மாளிகைகளுமேயாம்.

மலை.

திரிகூடாசலம் என்னும் இக்குற்றாலத்து மலையானது, பொதியமாமலையின் நடுப்பாகமெனத் துணியப்படுகிறது. இப்பாகம் தென்வடல்சுமார் பத்துமைலும், கிழமேல் இருபது மைலுமாகும் மென்பர். இவ்வெல்லைக்குட்பட்ட இடமெல்லாம் நீர் நில வளங்களால் விசேஷித்தவைகளேயாம். எங்கே பார்த்தாலும் மா, பலா, தெங்கு, கமுகு, வாழை, நாரத்தை, ஆரஞ்சு, மாங்குஸ்தான், ஏலம், கிராம்பு, ஜாதிக்காய் முதலான மரவகைகளும், காப்பித் தோட்டங்களுமாகவே நிறைந்திருக்கின்றன. கோஷ்பாத பூமிகூட இங்கு வெற்றிடமாக காணப்படுவதில்லை. மேட்டுப்பாங்கான பிரதேசத்தோடு சில பள்ளத்தாக்குகளிலும் தேக்கு, கோங்கு நாங்கு, தோதகத்தி. சண்பகம், கடம்பு முதலான குலமரங்கள் சாகோபசாகையுடன் வானுறவோங்கி வளர்ந்து, நீருண்ட மேகமென்னும் யானைக் கூட்டங்களுக்கோர் கட்டுத்தறிகளைப்போல் விளங்கா நிற்கின்றன. சிற்சில

இடங்களிலுள்ள புதர்களும், ஆற்றோரங்களும் புலி, கரடி, பன்றி முதலான துஷ்ட மிருகங்களுக்கும், சாதுவான மான் முதலான விலங்குகளுக்கும் வாசஸ்தானமாயிருக்கின்றன. பலவிதமான குரங்கு உடும்பு அணில் ஓந்தி பல்லி பறவை ஆகிய இவைகளை ஒருசேர இவ்விடத்திலன்றி மற்றெவ்விடத்தும் காண்பதரிது. யானைக் கூட்டங்களும் சில காலங்களில் இங்கு வந்து போவது உண்டு. இப்பிராணிகளைக் கொண்டிருத்தலால் இம்மலையை மிருகக்காட்சிசாலை என்றும் கூறலாம். காப்பி, ஏலத்தோட்ட முதலாளிகளின் பங்களாக்களும், துரைத்தனத்தாருடைய கட்டடங்களும், மலைக்குறவர்களின் சிறு குடிசைகளும் இவ்வனத்துக்கோர் அழகைச் செய்வனவேயாம்.

ஆதிகாலத்தில் அகத்திய மஹா முனிவர் தமது சீடர்கள் புடைசூழ இம்மலைக்கண் வந்து தவஞ்செய்து கொண்டிருந்தனர் என்றும், சிவபெருமான் அவர்முன் எழுந்தருளித் தமது திருக்கலியாணக் கோலக் காட்சியை அளித்தனர் என்றும் புராணங்கள் கூறுகின்றன. அன்றியுமிங்குள்ள குகைகளில் பல நூற்றாண்டுகளின்முன் சமணமுனிவர்கள் வந்து வதிந்ததாகவும் தெரிகிறது.

## அருவி.

குற்றாலத்திலிருந்து தென்மேற்கு மூலையில், சற்றேறத்தாழ இருபது மைல் தூரத்திலுள்ள நடுமலையில் பல ஜாதி விருக்ஷங்களாலும், செடி கொடிகளாலும் அடர்ந்து நெருங்கி, இருண்டு சூரியகிரண மென்பதை ஒருகாலத்தும் கண்டறியாத சில பாறைகளின் அடிவாரத்திலிருந்து, சிற்சில ஊற்று நீரோடைகள் வெளிப்படுகின்றன. இவைதான்

சித்திராநதியின் மூலமெனத் தெளிய வேண்டியிருக்கிறது. இந்த நுட்பத்தைக் கண்டுபிடிப்பது வெகு அருமையான காரியமாகும் என்பதை விளக்க வேண்டி, ஒரு பெரும் புலவர், 'ஞானிகளுமறியார்கள் சித்திரா நதிமூலம்' என்று கூறியிருக்கின்றனர். இங்ஙனம் சிறிதுசிறிதாகவெளிப்பட்டு வரும் நீரோடைகளெல்லாம் ஆங்காங்குள்ள பள்ளத்தாக்குகளில் ஒன்றுகூடி, ஒரு கால்வாயாகின்றது. இக்காலின் நீர்ப்பரப்பு மூன்றடி அகலமும், ஒன்றரையடி ஆழமுமுள்ள தாயிருக்குமாயினும், பலதுளி பெருவெள்ளம் என்றபடி வர வரப் பல பக்கங்களிலுமிருந்து வந்து கூடுகிற சிற்றோடைகளால் இது ஒருநதியின் கவுரவத்தையடைகின்றது. இந்தச் சித்திராநதி தனது உற்பத்தி ஸ்தானத்திலிருந்து வடகிழக்காய்ப் பதினன்கு மைல் தூரம் வந்ததின் பிறகு, அம்மலைக்குள்ளேயே ஒரு அருவியாக விழுகின்றது. இவ்வருவி குற்றாலத்திலிருந்து சுமார் ஆறுமைலிருக்கும். இந்நீர் வீழ்ச்சியின் பெயர், தேனருவி என்பர். இவ்வருவியை அடுத்துள்ள மலைப்பக்கங்களில் தேன் கூடுகள் மிகுதியா யிருப்பதினாலேயே இதற்கு இப்பெயர் வந்தது. சில வேளைகளில் இக்கூடுகளினின்று தேன்துளிகள் சிதறப்பெற்று பாறைகளில் விழுந்து, ஒழுகுவதுமுண்டு. பல துஷ்டமிருகங்களுக்கும், விஷ ஜெந்துக்களுக்கு மிடமாகிய இத்தலத்தில், யாத்திரைக்காரர்கள் ஆடி அமாவாசை, சித்திரை விஷுமுதலான பருவகாலங்களில் அன்றி மற்றகாலங்களில போவதில்லை. சாதாரண காலங்களிற் செல்லத் துணிபவர்கள் தக்கதுணையோடன்றிச்செல்லக்கூடாது. இந்தத் தேனருவி என்னும் நீர் வீழ்ச்சியையும், ஆங்கெழுந்தருளி விளங்கும் மகாலிங்கத்தையும், அத்தலத்தையும் பற்றி வெகுவிசேஷமாய்த் திருக்குற்றாலத் தலபுராணங் கூறுகின்றது.

அப்பால், அந்த ஆறு மலைவழியாகவே மூன்றரை மைலளவு வடகிழக்காய்வந்ததின்பிறகு, சேண்பகாடவி என்னுமிடத்தில் மற்றோர் அருவியாய்விழுகிறது. செண்பகமரங்கள் மிகுந்த இக்காட்டின் மத்தியில் விழுவதால் இவ்வருவியின் பெயர்செண்பகாடவியருவி என்கிறார்கள். வேறுசிலர் இங்குக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீகாளிதேவியின் பெயரால் செண்பகாதேவி அருவி என்று இதனை அழைக்கின்றனர். இந்த அருவி அதிபரிசுத்தமும் உருசியுமான நீர்ப்பெருக்குடையது. பால்போல் வெண்ணிறங்காட்டிச் சிறிது உயரத்தினின் றிழியும் இந்நீர்வீழ்ச்சி, தரையில் விழாமல் கீழுள்ள ஆழமான தடாகத்தின் மத்தியில் "புதபுதென்று" விழுவதால் வந்த ஜனங்கள் களிப்புடன் தலைகொடுத்து ஸ்நானஞ் செய்ய உபயோகமற்றதாயிருக்கிறது. தடாகமோ ஜில்லென்று குளிர்ந்து, குல்லென்று கிளம்பிவரும் அலைகளால் கரைகளை ஓயாது மோதிக்கொண்டிருக்கின்றது. இதில் விழுந்து சிலர் நீந்தி விளையாடுகின்றனர். இவ்விளையாட்டுச் சிலவேளைகளில் வினையாக முடிந்தாலும் முடியலாம். இங்கோர் சிறிய குகையிருக்கிறது. இதிலிப்போதும் சில துறவிகள் வசிக்கின்றனர். பிரதிதினமும், இங்கு யாத்திரைக்காரர்கள் வந்தவண்ணமா யிருக்கின்றனர். வந்த ஒவ்வொருவரும் அவ்வருவித்தடாகத்தில் நீராடிச் சண்பகாதேவியைத் தரிசித்து, ஆற்றோரங்களில் சமையல் செய்துண்டு, மாலையானதும், ஊர் நோக்கித் திரும்புகின்றனர். சண்பகாரண்யம், சண்பகாடவியருவி, சண்பகாதேவி ஆகிய இவைகளின் மகாத்மியத்தைப்பற்றிக் குற்றாலத் தலபுராணம் வெகு விசேஷமாய்ப் புகழ்ந்து பேசுகின்றது.

அங்கிருந்து அந்நதி வடகிழக்காகவே இரண்டரை மைலளவு விரைந்து வந்ததின் பிறகு, தரைப்பாகமாகிய குற்றாலம் என்ற ஸ்தலத்தில் அருவியாய் விழுகிறது. இப்படி விழும்இந்நீர்வீழ்ச்சி மேற்பாகத்திலிருந்து ஒரேநெட்டாய்த் தரையில் வந்து விழவில்லை. அப்படி விழுமாயின் ஸ்நாந சுகத்திற்கு இது சிறிதும் உபயோகப்பட்டிருக்கமாட்டாது தெய்வாதீனமாய் இவ்வருவி அம்மலையில் நடுப்பாகத்தி லுள்ள குழிவான ஒரு பாறையால் தடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் இந்த அருவியை, மேலருவி கீழருவி என இரண்டு பாகமாகப் பிரிக்க இடமுண்டாயிற்று. மேலருவி விழு மிடத்திலுள்ள அச்சிறிய தடாகத்துக்குப் போங்குமா கடல் என்று பெயர். அருவிநீர் விழுந்தோறுஞ் சிறிதிட மேயுள்ள அக்கற்கிடங்கு விரைவில் நிரம்பி மேலே பொங்கி வழிவதால் இதற்குப் 'போங்குமா கடல்' என்ற பெயரைச் சூட்டினர் போலும். இவ்வருவியிலாவது, அது விழுங் குண்டத்திலாவது ஜனங்கள் வந்து நீராடுவதில்லை. தூரத்தி லிருந்து தரிசனை செய்தே செல்வார்கள். பிரவாக காலங் களில் பெரும்பாலார் இங்கு வந்து நீராடுகையில், கால் வழுக்குண்டுருண்டு வீழ்ந்து மாய்ந்தவர்களும் சிலராவர்.

கீழ்ப்பாகத்திலுள்ள அருவியேஉலகப்பிரசித்தமான குற் றாலத்தருவி எனக்கூறப்படுவது. இது வடதிசையை நோக்கி வீழ்வதால் வடஅருவி என்றும் அழைக்கப்படுகிறது.இதையு மிரண்டு பாகமாகப் பிரித்திருக்கின்றனர். நீர் நிரம்பிவரும் இந்நீர் வீழ்ச்சியிற் சிறிது பாகத்தைக் கிழக்குப்பக்கத்தில், பெண்கள் தலைகொடுத்துநீராடத் தக்கதாய்விழுமாறு பிரித்

திருக்கின்றனர். இப்படிப் பிரிவு படுத்தியிருக்கும் இச் சிற்றருவிக்குப்பெண்ணருவி எனப்பெயரிட்டிருக்கின்றனர். மற்ற மேற்குப் பாகத்திலுள்ளதையோ ஆணருவி என்பர். ஒவ்வோரருவியிலும் பாலரும் வயோதிகரும் நோயாளரும் வெகு சுலபமாய்ச்சென்று நீராடி மீள்வதற்கேற்ற வண்ணம் பருத்த இருப்புக் கம்பிகளால வரம்பிட்டிருக்கின்றனர். செல்லுமிடங்கள், கால் வழுக்காதபடி அடிக்கடி மணலையிட்டுத் தேய்த்துச் சுத்தஞ் செய்யப்படுகின்றன. தடாகமும், அதன் கரைப் பக்கங்களும் அசுத்த மடையாத வண்ணம் அதிகாரிகளால் கவனிக்கப்படுகின்றன. ஆண் அருவியில் ஆண்மக்களும், பெண்ணருவில் பெண்பிள்ளைகளுமே ஸ்நாநம் செய்யவேண்டும் என்று வரையறுக்கப் பட்டிருக்கிறது. அருவியாடச்செல்லுமுன், கையிலுள்ள பதார்த்தங்களைப் பத்திரமாய் வைத்துப் பூட்டிக்கொள்ளவும், நீராடிய பிறகு காய்ந்த வஸ்திரம் கட்டிக்கொள்ளவும் சிறிது சிறிதான புல் விடுதிகளும் அக்குளத்தின் அணித்தாகக் கட்டப்பட்டிருக்கின்றன.

பிரயாணிகள், வெள்ளென்று வெளுத்த அமுததாரை போல் ஜோவென்று வீழ்ந்துகொண்டிருக்கும் அருவியைப் பார்த்தவுடன் தம்மை அறியாத ஆனந்தங் கொண்டவர்களாய் அடுத்துவந்து அருவியில் தலைநீட்டி ஆசைதீருமட்டும் அங்கேயே குளித்துவிட்டு வெளிப்படுவர். அப்படி வெளிப்பட்டவருங்கூட மீண்டும் ஆவல்கொண்டு, அருவியிற்போய் நிற்பர். இப்படிப்பலமுறை அருவியாடியும் திருப்தி இல்லாதவராய் மாலைக்காலத்திலும்வந்து நீராடுவார். தினமும் மும்

முறை நீராடப்பட்டவரும் உண்டு. இவ்வருவியில் எவ்வளவு நேரமிருந்து நீராடினலும் எவர்க்கும் அவா தீருவதில்லை.

மேற்குப்புறமுள்ள இவ்வாணருவி முன்னடியில் புஷ்ப வருஷம் போலவும், நடுப்பாகத்தில் மாரிகாலத்து மழை போலவும், அப்பாலுள்ள பாகங்களில் கோடைகாலத்துக் கல்மாரிபோலவும் வீழ்தலால், வருபவர் தங்கள் தரத்திற் கேற்ற இடங்களில் நின்று நீராடாநிற்பர். குளிரும் வெப்ப முமில்லாத ஒருவிதமான இன்பத்தைக் கொடுத்து உரோமம் சிலிர்க்குமாறு செய்து, உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையிலும் உள்ளும் புறமும் உள்ள பற்பல நோய்களையும், பாவங்களையும் அகலவோட்டி, உள்ளக் களிப்போடு சரீர ஆரோக்கியத்தையும் அளிக்கவல்லதாயிருக்கிற இந்த வட அருவியில், சாரற்காலமாகிய ஆனி, ஆடி, ஆவணி மாதங் களிற் சில நாளேனும் வந்திருந்து நீராடாதிருக்கும் மனிதர்களின் வாழ்க்கையைப்பற்றி யானென்னென்று சொல்வது! அவர்கள் இவ்வுலகிற்பிறந்து அவசியம் அனுபவிக்க வேண்டியதான இன்பத்தை அனுபவியாமல் போய்விட்டவராவரென்றே சொல்ல வேண்டியிருக்கிறது.

ராஜாக்கள், ஜமீன்தார்கள், பிரபுக்கள், ஏழைகள் முதலான பலரும் வித்தியாசமில்லாமல் அடுத்துநின்று அருவியாடாநிற்ப, ஐரோப்பியர் மாத்திரம் குறிப்பிட்டஒருகாலத்தில்வந்து தனிமையாகக் குளித்துப் போகின்றனர். இந்த அருவியையும், அவ்வருவியைத்தழுவி வெளிப்படும் மந்தமாருதமாகியதென்றற்காற்றையும், அக்காலத்தில் உண்டாகும் பனிநீர் தெளித்தலையொத்த சாரல் மழைத்தூவலையும் அனுபவித்து இன்பம் அடையும்பொருட்டு ஆயிரக்கணக்கான மைல் தூரத்திலிருந்துவந்து ஏராளமாகப் பொருட்

செலவுஞ்செய்து, இக்குற்றாலத்தில்வந்துவசிக்கும்பிரபுக்கள் இக்காலத்தில் பலர். அவர்கள்யாவரும்புண்யவான்களே யாவரென்பதற்கோர் ஐயமில்லை. சில வைத்திய சிரேஷ்டர்கள், மருந்தினுல் தீர்க்கமுடியாத சில ரோகமுள்ளவர்களையும் இங்குவந்து சிலகாலம் வசிக்கும்படி சொல்வார்களே யானுல், இக்குற்றாலத்தின் பெருமையைப்பற்றிப் புகழ்ந்து பேச எவராலாவது? விதிப்படி நீராடியவர்கள் இம்மை மறுமைப்பயன்களையெல்லாம் அடைகின்றனர் என உதாரணமுகத்தால் குற்றாலத் தலபுராணம் சொல்லுகின்றதை இங்குக் கவனிக்கத்தக்கது. இந்தச்சித்திராநதியின்உற்பத்தியைப்பற்றிக் கூறும் புராண வரலாறுவது:- ஆதிகாலத்தில் இமாசல குமாரியாகிய உமாதேவியை விவாகஞ் செய்யும் பொருட்டு ஆங்கெழுந்தருளிய சிவபிரானது ஆக்ஞையால் அகத்திய முனிவர் தமது மனைவியுடன் தெக்ஷிணம் நோக்கிப் பிரயாணப் படுகையில் ஸ்ரீ பராசத்தியின் அம்சமாய் அவதரித்த தாமிரை என்னும் பெயருடைய ஒரு தெய்வ கன்னிகையும் இவருடன் செல்வதானுள். இந்தத் திரிகூடாசலத்தில் வந்து சிலகால மிருந்தனர். ஒருநாள் அக்கன்னிகை நடந்து செல்கையில் அவள் காலணியிலுள்ள ரத்தினங்கள் ஒன்றோடொன்று உராயப்பெற்றதினுல் ஒருகன்னிகை உதித்தாள். அவள் பெயர் சித்திரை என்பது. பிறகு அவளே ஒருநதியாகப் பிரவாகித்தனள். அதுவேசித்திராநதி என்னும் பெயர் பெற்றது.

## தேன்றல்.

முற்கூறிய தேனருவி, செண்பகாடவி முதலானஇடங்களிலுள்ள, சதாமேகத்தால் மூடப்பட்ட சோலைகளினிடத்திற் பிறந்து, ஆங்காங்குள்ள ஓடதிவர்க்கங்களிலும், நாறு

விதமான புஷ்பங்களிலும், குளிர்ச்சியான நீரோடைகளி லும், அருவிகளிலும், அளவளாவிப் பல வகைப்பட்ட விருக்ஷஜாதிகளின் தலைகளின்மீது தாவிக்குதித்து, விளை யாடி 'கம்' என்ற வாசனையுடனும், 'ஜில்' என்ற குளிர்ச்சி யுடனும், 'மெல்'லென வடக்கே நோக்கி வெளிப்படுவதான ஒரு தெய்வத் தன்மை வாய்ந்த காற்றே தென்றற் காற் றென்று சொல்லப்படுகிறது. இந்த மந்த மாருதம் பொதி கையைச் சார்ந்த மலைகளிலுண்டாவதே யன்றி, மற்ற எந்தப் பருவதங்களிலும் பிறப்பதில்லை. இத்தென் காற்று, வெளிப்பட்டவுடன் மரங்களெல்லாம் தளிர்பிடித்து புஷ் பிக்கத்தொடங்கும். அந்தப் பூங்கொத்துக்களி லிருந்து பக்ஷி ஜாதிகளெல்லாம் தமது இனிமையான குரலுடன் பாடியாடிக் குலாவிக்கொண்டிருக்கும். மிருகங்களும் புற் பூண்டுகளுங்கூட இக்காற்றின் வருகையால் நோய் நீங்கப் பெறுகின்றன எனின், மானிடர்களுக்கு எவ்வாறு இருக்கு மென்று யாம் சொல்லவும் வேண்டுமோ? மூவகை உணவில் முதன்மையான உணவாகிய பரிசுத்தமான இத்தென்றற் காற்றை அவர்கள் உட்கொள்வதால் அரோகதிடகாத்திரத் தையும், அந்தரங்கத்தில் ஒருவிதமான ஆனந்தத்தையும் அடைந்து, எவ்வித சஞ்சலங்களிருந்தபோதிலும் அவை நீங்கி விடுகின்றன என்பது அனுபவ சித்தமாயிருக்கிறது.

மேலும், இத்திருக்குற்றால மலையினின்று வெளிப்படுவ தான மந்த மாருதத்திற்கு ஒரு தெய்வத் தன்மையை அத் தலத்திற்குரிய புராணம் விளக்குகின்றது. யாதென்றால், ஓர் உத்தம குலத்துப் பிராமணன் காலகதியால் ஒழுக்கங் கெட்டு வடநாடுகளில் திரிந்துகொண்டிருந்தவன், நற்காலம் அடுத்த காரணத்தால் தெற்கே நோக்கி வரத்தொடங்கி னான். கடைசியில் அவன் சோழநாடுதாண்டி, பாண்டிநாட்

டின் இக்குற்றாலப்பதிக்கு நேர்முகமா வந்துகொண்டிருக்கையில், இத் தெய்வத் திருத்தென்றல் அவன்மேல் வீச, அதனால் அவன் நல்லறிவு நல்லொழுக்கம் படைத்துப் பரிசுத்தனாகிவிட்டனன் என்பதே.

## ஆலயம்.

அருவியை அடுத்து மிகப்பெரிதும், சிறிது மில்லாத ஒரு தேவாலய மிருக்கின்றது. இக்கோயிலின் வெளிமதில் மற்றையக்கோயில்களுக் கிருப்பதுபோல் சதுரமாயிராமல் சங்கினது வடிவத்தை ஒத்திருக்கின்றது. அதனால் இவ் வீதியைச் சங்கவீதி என்கிறார்கள். இக்கோயில் வசதியான இடத்தில் வெகு அழகாய் அமைக்கப்பட்டிருக்கிறது. அதி விசித்திரகரமான வேலைப்பாடுள்ள தூண்களாலும்,வடிவான போதிகை உறுப்புக்களினாலும் நிர்மிக்கப்பட்ட பலமண்டபங்களையுங் கோபுரங்களையுமுடையது. திருமூல ஸ்தானத்தில் எழுந்தருளி விளங்கும் சுவாமியின் பெயர் திருக்குற்றால நாதர் என்பது. அம்பாள்பெயர் குழல்வாய்மொழி அம்பிகை என்பது. ஸ்ரீ பராசத்திபீடமாகிய தரணிபீடக்ஷேத்ரமும் இக் கோயிலின்கண் இருக்கின்றது. இஃதன்றி ஸ்ரீ நடராஜப் பெருமானுக்குரிய ஐவகைச் சபையிலொன்றான சித்திர சபையும் இவ்விடத்துள்ளதே. இச்சபையின் திருவீதியை வசந்தவீதி என்பர். காந்தம், பிரமாண்டம் முதலான புராணங்களினாலும், தேவாரத்திருப்பதிகங்களாலும் இந்த க்ஷேத்திரம் வெகு சிலாக்கியமாய்க் கொண்டாடப்பட்டிருக்கிறதென்றால் வேறியாம் சொல்லவும் வேண்டுமோ!

---

## III

## செல்வவிருத்தி விளக்கம்.

### இந்தியாவின் வறுமையைப் பெருக்கும் காரணங்கள்.

பலகாரணங்களால் இத்தேசத்தில் வறுமைத்துன்பம் நிலைத்திருக்கின்றதெனச் சொல்லலாம்

படிப்பின் குறைவு—விவேகமும் அறிவுமின்றிச் செல்வத்தைப் பெருக்குவது ஸாத்தியமல்ல. தகுந்த கல்வியே அறிவைப்புகட்டவேண்டும். ஆனால் முப்பதுகோடி ஜனங்களடங்கிய இந்நாட்டில் தகுந்த படிப்புள்ளவர்கள் பத்து லக்ஷத்திற்கு மேலில்லை. ஆண்பாலர்களில் ஆயிரத்துக்குத் தொண்ணூற்றெட்டுப் பேர்களும், பெண்பாலர்களில் எழு பேர்களுமே இத்தேசத்தில் 'படிக்கவும் எழுதவும்' தெரிந்தவர்கள். அக்ஞானமாகிய இருளானது மூடிக்கொண்டிருக்குமளவும் அயல் நாட்டார்களின் போட்டியால் இந்நாட்டார் நஷ்டமடைவார்களென்பதற்கு என்ன ஸந்தேகம்! ஆகையால் தகுந்த போதனுமுறைகளாலும், தொழிற்பயிற்சியாலுமே இத்தேசத்தார்கள் செல்வ விருத்தியைச் செய்து, இக்காலத்தில் பயன்படாத பழைய தொழின் முறைகளை அகற்றிப் புதிய சிறந்த வழிகளை நாடவேண்டும்.

புதிய பழக்க வழக்கங்கள்—மேலும் கீழ்நாட்டு நாகரிகமும், மேல்நாட்டு நாகரிகமும் கூடுகிற இத்தேசத்தில், ஆங்கிலேயர்களைப்போன்ற மேல்நாட்டார்களின் ஊக்கம், முன்யோசனை, விடாமுயற்சி, இனப்பற்று, கட்டுப்பாடு, நிர்வாகசக்தி, பொறுமை முதலிய ஒப்பற்ற குணங்கள் இந்துக்களுள் பரவுவதற்குமுன், அவர்களது நடையுடை பாவனை

களில் சில பழக்க வழக்கங்களே, வெகு சுலபமாக குளத்தில் கொட்டப்பட்ட எண்ணெய்போற் பரவுகின்றன. மேற்சொல்லிய அயல் நாட்டார்களின் சிறந்த குணங்களால் எவ்வளவுக் கெவ்வளவு நன்மை உண்டாகக்கூடுமோ அவ்வளவுக் கவ்வளவு பின்சொல்லப்பட்ட பழக்க வழக்கங்களால் இத்தேசத்தார்களுக்குத் தீங்குண்டாகக் கூடும். உடை, ஆகாரம், பானம் முதலிய விஷயங்களில் தொன்றுதொட்டு இந்துக்கள் வெகு அமரிக்கையாயும், செட்டாயுமிருந்து வந்திருக்கிறார்கள். இப்போது பல தேவைகள் பரவிவிட்டன. லாகிரி வஸ்துக்களையும், சுருட்டு முதலிய சரக்குகளையும் ஏழைகள்கூட உட்கொள்ள ஆரம்பித்துவிட்டார்கள்.

ஆயினும் இத்தேசத்தின் ஜனத்தொகையை நோக்குங்கால், மேற்சொல்லிய செலவு பெரிதன்று என்று சிலர் சொல்லக்கூடும். செலவுகுறைவாயினும் மேற்கண்ட சரக்குகளால் விளையும் தீங்கு பெரிதென்றே கொள்ளவேண்டும். புஸ்தகங்கள் கடுதாசி முதலியவற்றில் சுமார் ஒன்றரைக் கோடியளவே இத்தேசத்தார்களுக்குச் செலவாகின்றது. லாகிரிவஸ்துவில் மூன்றுகோடி ரூபாய் செலவாகின்றது. இதைப் பார்த்தால் கல்வியைவிடச் சாராயத்திற்கு இத்தேசத்தார்களுக்குத் தாகம் அதிகமாயிருப்பதுபோல் தோற்றும். மேலும் மேற்கண்ட மூன்று கோடி ரூபாயும் செல்வவிருத்திக்குப் பயன்படாத பணமென்றே நினைக்கவேண்டும். மேற்சொல்லிய வழக்கங்களும் தரித்திரத்தை நிலைத்திருக்கச் செய்கின்றன வென்பதற்குச் சந்தேகமில்லை.

3. நகையில் விருப்பம்—மேற்றிசை நாடுகளின் உபயோகமற்ற வழக்கங்களை நாடுவதுமன்றி, இந்நாட்டிற்குரிய சிலகெட்ட முறைகளையும் இந்துக்கள் அனுஷ்டித்து வருகி

றார்கள். உடை, ஆகாரம், பானம், வீட்டுவாடகை முதலிய வற்றிற்குக் கொடுத்து எஞ்சிய வருமானத்தை யெல்லாம் மிகுத்துச் செல்வப் பெருக்கத்திற்கு உபயோகிக்கவேண்டு மென்று நாம் பொதுவாய் நினைக்கிறதில்லை. தொண்டமான் முதல் தோட்டி வரையில் எஞ்சிய பொருளைக்கொண்டு அவரவர் சக்திக்கும், நிலைக்கும் தக்கபடி நகைகளைச் செய்து அணிந்துவிடுகிறார்கள்.

இச்செல்வமெல்லாம் வீண்பொருளென்றே கொள்ள வேண்டும். கோடிக்கணக்கான பவுன்கள் வருஷந்தோறும் இவ்வழியில் செலவாகின்றன. 1835-ம் வருஷம் முதல் சுமார் அறுநூறுகோடிப்பவுனுக்குமேல் தங்கமும்,வெள்ளி யும் இத்தேசத்திற்குள் புகுந்திருக்கின்றன. 1904-ம்வருஷத் தில் மட்டும் ஒருகோடி ரூபாய் விலையளவுக்குமேல் நகை களும், ரத்னங்களும் இந்நாட்டில் இறக்குமதியா யிருக்கின் றன. ஆகையால் எஞ்சிய பொருளையெல்லாம் செல்வவிருத் திக்குச் சாதனமாகச் செய்யாமல் பெண்பாலர்களுக்கு நகைகளாகச் செய்வது இத்தேசத்தில் தொன்றுதொட்ட வழக்கம். இக்காரணத்தைக்கொண்டே, ஸர்க்காரால் வெளியிடப்படுகிற ஸவரன்களெல்லாம் ஒருநொடிப்பொழு தில் மறைந்து விடுகின்றன. ஆபிரிக்காவில் எடுக்கப்பெற்ற தங்கமெல்லாம் மறுபடியும் இந்தியாவில் மடிந்துவிடுகிற தென்று சொல்வதற்கு இடமாகின்றது. செல்வவிருத்தியை யோசிக்குங்கால் நகையில் செலவிடுகிறபணமும், குளத்தில் போடுகிற பணமும் ஒன்றென்றே சொல்லலாம். நாளடை வில் கல்வியும்,அறிவும் பெருகப்பெருக நகைகளில் இந்திய ஸ்திரீகளுக்குள்ள பற்று குறைந்துவிடு மென்று சிலர் நினைக்கக்கூடும். இயற்கையில் அழகாய் அமைக்கப்பட்ட காதையும் மூக்கையும் பலவிடங்களில் துளைத்து, நகைகளை

அணிந்து கொள்வது இந்நாட்டுப் பெண்பாலர்களின் வழக்கம். பரவிய படிப்பால் இவ்வழக்கம் குறைந்ததாகத் தெரியவில்லை. பரவிய படிப்பால் இந்தியப் பெண்டிர்களின் முகத்தில் துளைகள் குறைந்தனவே யொழிய எஞ்சிய துளைகளின் நகைகளுக்கு வேண்டிய பணம் குறையவில்லை. இப்போது பதின்மடங்குப் பணத்தைச் சில நகைகளில் செலவிடுகிறார்கள். ஆகையால் செல்வ விருத்திக்கு உபயோக மில்லாமல் நகைகளில் மடிந்துபோகிற பணம் பரவியபடிப்பால் குறைந்து வருகிறதாகத் தெரியவில்லை. 1891-ம் வருஷத்தின் ஜனஸங்கியைக் கணக்கின்படி இத்தேசத்தில் நான்குலக்ஷம் தட்டார்கள் பிழைத்து வருகிறதாகத் தெரியவருகின்றது. இதைக்கொண்டே நகைகளில் எவ்வளவு செலவாகவேண்டுமென்று அறிந்துகொள்ளலாம்.

4. புதிய முறைகளை நாடாமலிருத்தல்—பழையவழக்கங்களையே சிறந்தவையாக நினைத்துக்கொண்டு புதியமுறைகளை நாடாமலிருப்பதும் இத்தேசத்தில் வறுமைக்குக்காரணமென்று சொல்லலாம். மேற்றிசை நாடுகளில் லாபகரமான முறையே சிறந்த முறை. இதைநாட ஒருவனும் பின்வாங்கமாட்டான். ஆனால் இயற்கையில் இத்தேசத்தார்களுக்குப் பழைய முறையே சிறந்த முறை. ஒற்றை நாற்று நடல் லாபகரமென்று அநேகர் விளக்கியும், பிடிபிடியாய் நாற்று நடவு எங்கும் நிலைத்திருக்கிறது. யந்திர ஸாதனங்களையும் தகுந்தபடி ஜனங்கள் உபயோகிப்பதில்லை. தண்ணீரைப் பள்ளத்தினின்றும் மேட்டுக்கு எழுப்புவதற்கு வெகுகாலமாகப்பழக்கத்திலிருக்கிற ஏற்றம்,கபிலை முதலியகருவிகளையே இந்நாட்டார்கள் உபயோகிக்கிறார்களே யொழிய, நீராவி யந்திரங்களைக்கொண்டு ஏராளமான ஜலத்தை நிலங்களுக்குப்பாய்ச்சிச் செல்வத்தை ஒருவரும் பெருக்கவில்லை.

5. ஒற்றுமையின்மை—ஊக்கமும், ஐக்கியமுமுள்ளவர்களே சிறந்ததொழில்களேயும், வியாபாரங்களேயும் நடத்தலாம். இந்த இரண்டுகுணங்களும் இந்நாட்டார்களிடத்து அதிகமாய் இல்லையென்று சொல்லலாம். ஒன்றுசேர்ந்து தொழில்களேயும், வியாபாரத்தையும் நடத்துவது இந்நாட்டார்களுக்குப் புதிய முறை. ஆனால் மேற்றிசை நாடுகளில் ஜனங்களின் பரஸ்பர ஸகாயத்தாலும், சேர்க்கையாலுமே செல்வப் பெருக்கம் ஏற்பட்டிருக்கின்றது.

6. கிராமவாழ்க்கையின் மலினம்— ஒருவாறு ஜனங்களின் ஐக்கியத்தை உண்டாக்கக்கூடிய கிராம வாழ்க்கையும் வரவர மலினமடைந்து வருகின்றது. தேசத்தின் செழிப்பைக் கிராமவாழ்க்கையில் தான் பார்க்கவேண்டும். கிராமம் பாழ்த்தால் நாடுசெழிக்காது. இப்போதுள்ள நாகரிகக் கிளர்ச்சியில் கிராமங்களினின்றும் ஊக்கமுள்ளவர்களெல்லோரும் பட்டணங்களுக்காவது, அயல் நாடுகளுக்காவது போய்விடுகிறார்கள். விதியில்லாதவர்களே கிராமத்தில் வசிக்கிறார்கள். ஆகையால் கிராமங்களுக்குரிய வேளாண்மையும் திறமையுடன் நடத்தப்படவில்லை. கிராம வாஸிகளுக்கு இன்றியமையாத ஒற்றுமையும் வெளியாகவில்லை. முற்காலத்தில் கிராமவாஸிகள் ஒன்றுசேர்ந்தே குளங்கள், கால்வாய்கள் வெட்டி, கோயில்களேயும் பாலங்களேயும் கட்டி, விவாதங்களேயும் தீர்த்துக்கொண்டு, பொதுவான காரியங்களே யெல்லாம் பொதுவில் நடத்திவந்தார்கள். ஆனால் இப்பொழுது சண்டைகளும், சச்சரவுகளும் வியாஜ்யங்களும் கிராமங்களில் மேலிட்டுவிட்டன. இப்போது பல பேர்களுக்கு வியாஜ்யம் நடத்துவதே நேரப்போக்காகவும்,

தொழிலாகவும் ஆய்விட்டது. இவ்வழிகளில் செலவாகும் பணமெல்லாம் செல்வப் பெருக்கத்திற்கு ஒரு சிறிதளவே னும் பயன்படுவதில்லை.

7. சொத்தின் விபாக முறைகள்:—இந்தியர்களுக்கு ரிய சில புராதனமான சட்டங்களும், சொத்து விபாக முறைகளும் செல்வப் பெருக்கத்திற்குச் சாதகமாயிருக்க வில்லை என்று தோன்றுகிறது. ஸ்தாவர சொத்துக்கள் பிரிவினைப்படாமல் ஒருசந்ததியிலேயே இருந்துவருவதால் பல நன்மைகள் உள. நூறு ஏக்ராநிலத்தைப் பத்துப்பாக மாகப் பிரித்துவிட்டால், சேர்ந்திருந்தகாலத்தில் உண் டான வரும்படியைவிட விபாகப்பட்ட நிலைமையில் வரும் படி குறைந்துவிடக்கூடும். ஒருவனுடைய ஆளுகையி லிருக்குங் காலத்தில் வேளாண்மையைத் திறமையுடனும் செட்டாகவும் செய்து வரலாம். பெரிய சொத்து சிறிய சொத்துகளாகப்பிரிந்து விட்டால், வீண்செலவும் நஷ்ட மும் மேலிட்டு வருமானமும் குறைந்துவிடக்கூடும். மேலும் விஸ்தாரமான சொத்துக்களிலேயே யந்திர முறைகளையும் நாடக்கூடும். பல காரணங்களைக் கொண்டு இங்கிலாந்தில் ஸ்தாவர சொத்துக்களுக்குக் குடும்பத்தில் மூத்தகுமா ரனே பாத்தியப் பட்டவனென்று சட்டமிட்டிருக்கிறபடி யால், குடும்பசொத்து மலினமடைவதில்லை. ஆனால் இந் நாட்டிலோ இந்துச் சட்டமுறையில், பிறந்த பிள்ளைகளுக் கெல்லாம் குடும்ப சொத்துக்களில் பாத்தியமேற்பட்டு, அவை மேன்மேலும் பிரிவினைப்பட்டு வருமானத்தில் குன்றிவிடுகின்றன. மேலும் பிறப்பினாலேயே சொத்துக் குப் பாத்தியம் எல்லோருக்கும் ஏற்பட்டு விடுகிறபடி யால், செல்வ ஸாதனத்தில் அவர்களுடைய ஊக்கத்திற் கும் விடாமுயற்சிக்கும் குறைவு உண்டாகக்கூடும். ஆனால் இங்கிலாந்திலோ மூத்தபிள்ளை தவிர மற்றவர்கள்உழைத்தே

செல்வத்தைத் தேடவேண்டும். இதுபற்றியே "திரைகடலோடியும் திரவியம்தேடு" என்ற முறையைக் கைக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் இவ்வுலகில் பல தேசங்களில் குடியேறி வியாபாரம் செய்கிற ஆங்கிலேயர்களின் ஊக்கத்தால் இங்கிலாந்தின் செல்வவிருத்திக்குக் கணக்கில்லை.

8. விவேகமற்ற தருமம்—நாம் தருமம் செய்யும் முறைகளிற் சில, வறுமையை நிலைத்திருக்கச் செய்கின்றனவென்றும் சொல்லலாம். 'ஐயமிட்டுண்' என்றபடி தருமம் செய்வது நியாயமே. ஆனால் தருமம் செய்யும் முறையில் பிறருக்கு நிலையான பயனை அளிப்பது சிறந்த வழியாகுமல்லவோ? பிறருடைய நன்மையையும், நீடித்த பலனையும் உத்தேசித்தே தருமத்தைச் செய்யவேண்டும். குளம் கால்வாய்களை வெட்டல், ரஸ்தாக்களைப் போடல், தங்குமிடங்கள், வைத்தியசாலைகள், பள்ளிக்கூடங்கள் முதலியவற்றை ஏற்படுத்தல், இனத்தார்களின் தொழிற்பயிற்சிக்கு வேண்டிய ஸாதனங்களை அமைத்தல், இவையெல்லாம் பயன்படக்கூடியனவே. ஆனால் நம்முடைய புண்ணியத்தையும், மேலுலகில் கிடைக்கக்கூடிய பேற்றையும் எதிர்பார்த்துக்கொண்டே மனிதர்களுக்கு அன்னமிட்டு வருவதோ, சோம்பேறிகளாய்ப் பிச்சையெடுத்துப் பிழைத்து வருவதையே தொழிலாகக்கொண்டு, பயன் படும்படியான வேலைகளையே செய்யாத பெரும்பான்மையோர் ஜீவிக்க இடம் தருகின்றது. சிற்சில காலங்களில் சிற்சில புண்ணியவான்கள் அன்னமிடுவதால் வறுமைத்துன்பம் நீங்குவதில்லை. பிச்சையெடுப்போர்களுக்கு ஊக்கமும் பெருந்தன்மையும் குன்றிச் சிறந்தவேலைகளுக்குத் தேகவலியுள்ளவர்களும் நாணயமாய் உழைக்காமல், சத்திரத்திற்குச் சத்திரம் தடுமாறிக்கொண்டிருக்கிறார்கள். இவ்விதமான புல்

லுருவிகள் தேசத்தின் செல்வவிருத்திக்குப் பயன்படவில்லை யென்று தோன்றும். மேலும் ஜனங்களின் பொதுநன்மையை உத்தேசித்து, அவர்களுக்குத் தகுந்த அறிவையும், ஞானத்தையும் புகட்டவேண்டு மென்றே முற்காலத்தில் தருமசிந்தையுடைய மன்னர்களாலும், சீமான்களாலும் ஏற்படுத்தப்பட்ட மடங்களும் கோயில்களும் மேற்சொல்லிய நோக்கங்களுக்கு விரோதமாகப் பெரும்பாலும் குதிரை யானை முதலிய மிருகங்களுக்கும், வேலையற்ற மனிதர்களுக்கும் ஊட்டுப்புரைக ளாகிவிட்டன. வீண் சண்டைகளிலும் விவாதங்களிலும் வியவகார நடவடிக்கைகளிலும் செலவாகும் பணத்திற்கும் குறைவில்லை. மேற்சொல்லிய செல்வமெல்லாம் ஒழுங்காக உபயோகப்பட்டால், ஏராளமான செல்வப் பெருக்கத்திற்கும், கல்விப் பெருக்கத்திற்கும் பயன்படுமென்பதற்குச் சந்தேகமில்லை.

9. ஊக்கமின்மை — ஊக்கமும் தைரியமு முடையவர்களே எக்காரியத்திலும் வெற்றியடைகிறார்கள். வறுமையை அகற்றிச் செல்வத்தைப் பெருக்கவும் இக்குணங்கள் இன்றியமையாதவை. ஆனல் இவை இந்நாட்டு ஜனங்களிடத்துவேண்டிய அளவு இருக்கின்றனவென்று சொல்ல முடியவில்லை. மன உறுதியுடன் நாளடைவிற் பெறக்கூடிய பயனையும் லாபத்தையும் உத்தேசித்து, வெகுநாள் பொறுமையுடன் வேலைசெய்வது இவர்களால் இயலாது. வேலை செய்யத் தொடங்கியவுடன் லாபத்தை அடையவேண்டு மென்று ஆவலாயிருக்கிறார்கள். இக்காரணம் பற்றியே பெரிய தொழில்களையும், வியாபாரத்தையும் அநேகர் இத்தேசத்தில் ஒழுங்காய் நடத்திவரவில்லை. ஆனல் ஐரோப்பியர்கள் எவ்விஷயத்திலும் ஊக்கம், தைரியம், விடா

முயற்சி நாளடைவில் அடையக்கூடிய பயனை உத்தேசித்து இப்போது உழைத்தல் முதலிய சிறந்த குணங்களை வெளியிடுகிறார்கள். ஆங்கிலேயர்களின் வியாபாரமுறைமைகளின் ஒழுங்கே, அவர்களது நாகரிகக் கிளர்ச்சிக்கும் பரவிய ராஜ்யத்திற்கும் முக்கிய காரணமெனக் கொள்ளலாம்.

10. ஸர்க்காருத்தியோகத்தில் மோகம்—இத்தேசத்தில் நடைபெறும் பல தொழில்களுள் ஸர்க்காருத்தியோகத்தையே பெரிதாகநினைத்து, அதை உத்தேசித்தே ஆயிரக்கணக்கான ரூபாயைச் செலவிட்டு லக்ஷக்கணக்கான சிறுவர்கள் கைத்தொழில் வர்த்தகம் வேளாண்மை முதலிய வேலைகளுக்குப் பெரும்பாலும் பயன்படாத படிப்பைப் பயின்று வருவதும் வறுமைக்குக் காரணமாக நினைக்கலாம். ஜனங்களின் நன்மையை உத்தேசித்தே துரைத்தனத்தார்கள் பாடசாலைகளையும், கல்லூரிகளையும் ஏற்படுத்தி மேற்றிசைக் கல்வியை எல்லோருக்கும் புகட்டுகிறார்கள். படித்தவர்களெல்லோரும் ஸர்க்காருத்தியோகத்தை நாடவேண்டுமென்பது துரைத்தனத்தார்களின் நோக்கமன்று. ஆயினும் இந்நாட்டில் ஸர்க்கார் ஸேவகத்திற்கு அதிக மதிப்பு ஏற்பட்டிருக்கிறபடியால் அதை, உத்தேசித்தே பெரும்பான்மையோர் கல்வியைப் பயின்றுவருகிறார்கள். சிறந்த கல்வியைப் பெற்றுக் கைத்தொழில்களையும் வியாபாரத்தையும் நாடுகிறவர்கள் வெகு அருமை. இவ்வகையான வேலைகளை இழிவாய் நினைப்பவர்களும் பலர். சித்திரவேலையில் தினமொன்றுக்கு மூன்று ரூபாய் அடைகிறவனையும், வாரத்தில் மூன்றுநாள் புகை வண்டியைச் செலுத்தி, மாதம் முந்நூறு ரூபாய் பெறுகிறவனையும்விட, இரவும் பகலும் கஷ்டப்பட்டு உழைத்து, வாங்குகிற சொற்பசம்பளத்தில் மேலதிகாரிகளிடத்து நிந்தனைகளைத்

தாராளமாய் அடைகிற குமாஸ்தாக்கள்கூட கௌரவப் பட்டவர்களென்று நினைப்பது நம்மில் அரிதன்று.

ஆகையால் அவர்கள் படிப்பில் செலவிட்ட செல்வ மெல்லாம் செல்வப்பெருக்கத்திற்குச் சாதனமாய் ஆகா மல், சிறந்த புத்தியும், விவேகமுமுள்ள இந்தியர்களில் பலர், நிர்வாகசக்தியும் தொழிற் பயிற்சியு மில்லாமையால் துக்க ஸாகரத்தில் மூழ்குகிறார்கள்.

மேற்சொல்லிய விஷயங்களெல்லாம், இத்தேசத்திற்கு வறுமையைத்தரும் காரணங்களிற் சில வென்பதற்குச் சந் தேகமில்லை. இக்காரணங்கள் பிறரால் ஏற்படுவதில்லை. ஜனங் களின் பழக்கவழக்கங்களாலும்,நோக்கங்களாலுமே ஏற்படு கின்றன. ஆகையால் இவற்றை அகற்றிச் செல்வ ஸாதனங் களையும், செல்வப்பெருக்கத்திற்கு இன்றியமையாத குணங் களையும், தொழிற்பயிற்சியையும் அடைய முயலுவதும், முயன்று அடைவதும் ஜனங்களின் கடமையே.

செல்வவிருத்தி முறைமைகளை நன்குணர்ந்து, எல் லோரும் மனக்கலப்புற்று, சொந்தலாபத்தையும் தேசத் தின் நன்மையையும் ஊக்கத்துடன் நாடுவார்களேயாயின், நாளடைவில் பெருகிய செல்வத்தால் எல்லோரும் க்ஷேம மடைந்து, வறுமைத்துன்பமும் நீங்கி, நிலவளமும் நீர்வள மும் பூண்ட இந்நாடானது இப்பூவலயத்திற் சிறந்த மணி போல் விளங்குமன்றோ?

---

# IV. விடாமுயற்சி.

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

முயற்சி, வினை, தொழில் என்பன ஒருபொருட்சொற்கள். இம்முயற்சியானது உலகத்திலுள்ள எல்லாருக்கும் இன்றியமையாதது; சகல காரியங்களையும் நடத்துவது. தினந்தோறும் புதிய புதிய தோற்றங்களையும் சுகதுக்கங்களையும் கொடுத்து நிற்பது. மானிடர்களில் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், கற்றவர்கள், கல்லாதவர்கள், பலசாலிகள், பலவீனர்கள் முதல் எல்லாருக்கும் உரியதாகி அவரவர்களை உயர்த்துவது இதுவே.

இது சரீரமுயற்சி, மனமுயற்சி என இருவகைப்படும். இவற்றுள் மன முயற்சியே மிகச் சிறந்ததாகும். சரீர முயற்சிக்கும், மனமுயற்சியின் துணை அவசியமாகும். மன முயற்சிக்கோ சரீர முயற்சியின் துணை அவசியமில்லை. மனமுயற்சியினின்றுதான் சரீர முயற்சி தோன்றுமென்று கூறினும் இழுக்காது. பூதபௌதிக ரசாயன நூல்கள், கணிதநூல்கள்,வேதாந்த சித்தாந்த நூல்கள் முதலிய சகல சாஸ்திரங்களும் ஒவ்வொருவருடைய மனமுயற்சியின் பயனாகவே வந்தன என்பதை யாராவது மறுக்க முடியுமா?

யார் யார் எதை எதை அடையவேண்டுமாயினும், தக்க வகையால் விடாது முயலல் வேண்டும். விடாமுயற்சியுடையார்க்கு எதுவும் கைகூடும். "என்னை? உயர் மரக்கொம்பில் உள்ள தேனைத் தானே சென்றடையவேண்டுமென, ஒருமுடவன் விடாது முயன்றால், அது கைகூடுமா றெங்ஙனம்? இத

னால் முயற்சியினாலேயே எதையும் அடையலாம் என்றல் இயையாதன்றோ?" எனின், "அஃதன்று. தக்கவகையால் விடாது முயறல் வேண்டும் என மேலே கூறியதைக் கவனித்தால் இத்தகைய ஆசங்கை நிகழாது" என்க. முயற்சிக்குரிய தக்க வகை யாது? எனிற் கூறுவம்.

காலமறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலமறிந்து விளைவறிந்து—மேலும்தாம்
சூழ்வன சூழ்ந்து, துணைமை வலிதெரிந்து
ஆள்வினை யாளப் படும்.

என்ற நீதிநூலுடையார் கூற்றை நன்கு சிந்தித்தால், முயலும் வகை யனைத்தும் எளிதிற் காணலாம்.

ஒரு காரியத்தின் நிமித்தம் முயலுமுன்னர், அதைச் செய்து முடித்தற்குரிய காலத்தையும், செய்தற்கேற்ற இடத்தையும், அக்காரியத்திற்குக் காரணத்தையும், செய்யுங்காலும், செய்தபின்னும் வரத்தக்க நன்மை தீமை விளைவுகளையும் ஆராய்ந்துகொண்டு, யோசிக்கற்பால அனைத்தும் ஓர்ந்து, தனக்குத் துணையாக வருபவைகளையும் சிந்தித்துச் செய்யவேண்டும் என்பது மேற்கவியின் கருத்தாகும்.

பொருள், கருவி, காலம், வினை இடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்.

என்ற தேவர் திருவாக்கும் இதுவேயாம்.

"ஒன்றைச் செயப்புகு முன்னரே, இதைச் செய்தற்கு இப்பொழுது ஏற்றகாலமா?" என்பதை முதற்கண் ஆராய வேண்டும். ஆங்காலமாயின், உடனே செய்யத் தொடங்கலாம். அல்லாத காலமாயின் ஆங்காலம் வரும்வரை பொறுத்து அடங்கியிருந்து, அது வந்த பின்னரே முயல வேண்டும். இது பற்றியே,

காலம் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.
கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

என்றார் பெரியோர். பகலிற் கூகையைக் காக்கைவெல்லும்; இரவில் அக்காக்கையைக் கூகையே வெல்லும்.

கால நலத்தைக் கருதுவதுபோலவே காரியசித்தி பெறுதற்குரிய இடத்தைப்பற்றிக் கவனித்தலும் மிக அவசியமே. "தன் ஊருக்கு யானை அயல் ஊர்க்குப்பூனை" என்பது பழமொழியன்றோ? நீருள்ளிருக்கும்போது முதலை மலையையொத்த மதயானையையும் இழுத்துவெல்லும். தன்னிடமாகிய நீரைவிட்டுக் கரையில் வந்துவிட்டால், ஒருநரி கூட அம்முதலையைவென்றுவிடும். கருடனைக்கண்ட பாம்புகள், அஞ்சி நடுங்குவனவாகும். சிவபிரான் அணிந்திருக்கிற பாம்புகள் அங்குவந்த கருடனைக்கண்டு புன்னகைகொண்டு 'கருடா சுகமா?' என்று வினவினவாம். அதுகேட்ட கருடன் அப்பாம்புகளின்செயலை வியந்து, 'யாருக்கும் இருக்குமிடத்திலிருந்தால் சுகந்தான்' என்று விடைகொடுத்ததாம். இதனால் ஒவ்வொருவருடைய வலிமையும் எல்லா இடத்தினும் செல்லுமெனக்கருதாது, தங்கள் தங்கட்கு உரியஇடத்தின் அமைதியைக் கவனித்தே முயல்வது அவசியமாகும்.

நாம் செய்யும் காரியம் இதன்மூலமாக முடியுமென்று அதற்கு ஆதிநிலையை ஆராய்ந்துகொள்வதும், அதைச்செய்யுங்கால் இடையில் சம்பவிக்குங் கஷ்டநஷ்டங்களையும் தெரிந்து, அவற்றிற்குத்தக்க பாதுகாப்போடு செய்வதும், அக்காரியம் நிறைவேறுதலால்உண்டாகும்பயன் இன்னது

என்று தெரிந்துகொள்வதும் அவசியம். மிகப்பெரிய காரியத்தைச்செய்து, அறச்சிறிய பலனை அடையவேண்டிவரின், வியர்த்தமாம். 'மலையைக்கிள்ளி எலியைக் கொள்ளல்' என்றபடி, வீண்படாவாறு முன்னரே கருதிச்செய்துமுடித்தல்வேண்டும். இவ்வாறு ஆராயாமல் அவசரப்பட்டுப் பொறுமை,கோபமுதலியவற்றால் முதலில் ஒன்றைச்செய்து, பின்பு மனங் கவல்வது அறிவற்றசெயலேயாம். ஒன்றைச் செய்யுமுன்னரே அதைப்பற்றி யோசிக்கவேண்டியவற்றையெல்லாம் நிதானமாய் யோசித்துத் தீர்மானித்துப் பிறகே தொடங்கவேண்டும். அங்ஙனம் ஆலோசியாது தொடங்கினால் இடையே வலியற்று இடர்ப்பாடெய்த நேரும்.

உடைத்தம் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர் என்பதும்,
எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு

என்பதும் இக்கருத்தை வலியுறுத்துவனவாம்.

தாம் எவ்வளவு வலியராயினும் தம்துணைவர் வலியையும் அறிந்து செயல் வேண்டும். யாவராயினும் பிறருதவியின்றி ஜீவிக்கமுடியாது. ஆதலின் நட்புக்கொண்டு உதவுவார்களின் கால நலம் முதலியவற்றையும் நாமே நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமென்பதாயிற்று.

இங்ஙனமே காலம் இடம் முதலிய அனைத்தையும் முன்னரே தெரிந்து தொடங்குவார்க்கு, முடியாத காரியம் ஏதுவுமிராது. இதனாலேயே,

ஞாலம் கருதினும் கைகூடும் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

என்றார் பெரியார்.

இங்கே கூறிய எல்லாவகையாலும் தெரிந்து தொடங்கியபோதும் அக்காரியம் நிறைவேறாது தவிர்தலும் உண்டு. ஒருமுறை தவறினால் அத்துடன் மனச்சலிப்புறாது பின்னும் பின்னும் அதுவே நினைவாகப் பன்னாள் முயலல்வேண்டும். அவ்வாறு விடாமுயற்சிசெய்யின் அக்காரியம் கைகூடுமென்பது ஒருதலையேயாம். உலகத்தில் பகீரதப் பிரயத்தனம் என்று வழங்கும் பழமொழியைப் பார்ப்போம். ஆகாயகங்கையைப் பூமிக்குக் கொண்டுவரக்கருதி, ஒருவன் பன்னாள் முயன்று இறக்க, அவன் மகனும் அவ்வாறே பன்னாள் முயன்று இறக்க, அவன் மகன் மனந்தளராது முயன்று அக்கங்கையைப் பூமியிற் கொண்டுவந்து, கருமத்தை நிறைவேற்றினான். இவனே பகீரதன். இதனால்தான் 'பகீரதப்பிரயத்தனம்' என்று விடாமுயற்சிக்கு இவனையே உலகத்தார் உதாரணம் கூறுவாராயினர். இது நிற்க,

'முயற்சியால் அடையத்தக்கது எதுவுமில்லை; எல்லாம் விதிப்படியே (ஊழின்படி) நடக்கும்' என்று கூறுவார் பலர். விதியே வலிதென்றும், மதியே வலிதென்றும் பலர் சண்டையிடுவர்.

ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.
தெய்வத்தா லாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

என்பவற்றை, எடுத்துக்கூறித் தங்கடங்கள் கல்வியறிவிற்கேற்ப வாதித்து எதிரி வாயையடக்குவர்; 'வெல்லாமல்எவரையும் மருட்டிவிட, வகைவந்த வித்தை' கற்ற இவர்களின் உரை வெற்றுரையேயாம் என்ற உண்மையை ஒரு மேற்றி

சைப் புலவர் கூறிய*'வாழ்விசைப்பா' என்ற விஷயத்தை யும் நன்காராய்ந்து அறிக.

நிற்க, இந்த ஊழ் என்பது யாது? என்று ஆராய்வாம். "இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதலாகிய நிய தியே ஊழ்'' என்பர் பரிமேலழகர். இஃது எல்லா நூலாசி ரியர்க்கும் ஒப்பமுடிந்ததாம். ஆகவே, விதி அல்லது ஊழ் என்பது, நாம் முன்னர்ச்செய்த கர்மபலனேயன்றி வே றில்லை. ஆகவே அந்த ஊழுக்கும் ஆதியாய் நிற்பது நமது தொழிலே என்று துணியப்படும். இங்ஙனமாக, முயற் சிக்கு வேறாகாத விதியை வேறு தனிப்பொருளாகக் கொண்டு, வாதித்தல் செல்லாதென்க. அன்றியும் மார்க் கண்டேய முனிவர் தம்முயற்சி வலியால் விதியையும் வென்று, என்றும் இறவாத பதவி பெற்றார் எனக் கூற லானும், மனத்திட்பத்துடன் விடாது முயன்றால் விதியை வெல்லலாம் எனக்கருதி,

> உலையா முயற்சி களைகணா வூழின்
> வலிசிந்தும் வன்மையும உண்டே—உலகறியப்
> பான்முளையே தின்று மறலி யுயிர்குடித்த
> கான்முளையே சாலுங் கரி—எனவும்,
> ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழா துஞற்று பவர்

எனவும் முனிவரும் தேவரும் பணித்தமையானும், முயற்சி யானது அவசியம் வேண்டப்படுவதொன்றே என்பது போதருதல் காண்க.

ஒவ்வொருவருக்கும் தம் முயற்சியால் வருபொருள் சிறிதேயாயினும் அதனாலடையும்மகிழ்ச்சி மிகப்பெரிதாதல்

---

* Psalm of life.

உலகானுபவமாகும். "பிறர் தேடிவைத்த தந்தக்கட்டிலில் பட்டுமெத்தைமேல் துயில்வதினும் தான் தேடிய தாழம் பாயில் துயிறல் சிறந்தது" என்பது பழமொழியன்றோ?

"முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்" "உத்யோகம் புருஷ லக்ஷணம்" என்பன முதலான எத்தனையோ முதுமொழிகளால் நம்மவர்கள் முயற்சியையே மிகப்பெரிதாகக் கருதியவர்கள் என்பதை அறியலாம். முயற்சி யுடையார்க்கே செல்வப்பெருக்கு உளதாமென்பதும், முயற்சியில்லாதார் உபகாரிக ளாகாரென்பதும், அவர் உபகரிக்கத் தொடங்கினும் இடைக்கண் முறிந்துபட் டொழிவ ரென்பதும், பொய்யில் புலவர் கருத்து. இதனை,

தாளாண்மை யென்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை யென்னும் செருக்கு
தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்

என்னும் வேதமொழிகளே வலியுறுத்தாநிற்கும். இங்ஙனம் முயன்று ஈட்டும் பொருளெல்லாம் தக்கவர்கட்கு உபகரித்தற்கே உரியனவாகக் கொள்ளவேண்டு மென்பர்.

தாளாற்றித் தந்த பொருளெலாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு

எனவும் கூறினர். இவற்றால் முயல்தற் சிறப்பும், முயன்றீட்டும் பொருட்சிறப்பும், அப்பொருளாற் பெறப்படும் பயனின் தன்மையும் இனிது விளங்குவனவாம்.

ஆங்கிலேயர் ஜப்பானியர் அமெரிக்கர் முதலிய எத்தனையோ நாட்டார்கள் முயற்சியின் பலத்தால் முன்னிலும்

பன்மடங்கு மேம்பாடுற்று விளங்குவதை யாவரே அறியார்? இவர்கள் சிலகாலத்துக்குமுன்னர் இருந்த தாழ்ந்தநிலைமையையும் முயற்சி வலிமை பெருகப்பெருகத் தற்போது இவர்கள் அடைந்திருக்கும் மஹோந்நத நிலையையும் சரித்திரவாயிலாகப் படித்தறிந்தவர்கள் ஒரு நிமிஷங்கூட முயற்சியின்றி வீண்பொழுதுபோக்கச் சம்மதியாரென்பது துணிபு.

இத்தகைய முயற்சியென்னும் செழும்பயிர்க்குக் களையாகத் தோன்றுவது மடி அல்லது சோம்பலாம். மடிமை குடிமையைக்கெடுத்து மிடிமையைக் கொடுத்து வாழ்நாளையும் குறைத்துத் தேகநலத்தையும் தொலைப்பதாகும். நம் நாட்டில் எத்தனையோ வாலிபர்கள் யாதொரு முயற்சியுமின்றிச் சோம்பேறிகளாய் ஆண்டி வேடமிட்டும், கல்லுளிமங்கராயும் பிச்சையேற்று, வயிறுவளர்த்துக் காலங்கழித்துத் தமக்கும், பிறர்க்கும் கேடுபுரிவாரா யிருக்கின்றனர். பருத்துக்கொழுத்த தேகவலிமை யுடையவராய் யாதொரு தொழிலுஞ்செய்யாது பிச்சையேற்றுண்கின்றனர். பிச்சையேற்கும் காலம் ஒழிய, மற்றை நேரமெல்லாம் சூதாட்டம் களியாட் டாட்டங்களிற் கழிக்கின்றனர். முயற்சியற்ற சோம்பேறிகளின் முகத்தில் லக்ஷ்மீகரம் சற்றும் இல்லை. முயற்சியாளர் முகத்திலோ எப்பொழுதும் பேரழகு பொலிந்து தோன்றும்.

மடியுளாண் மாமுகடி யென்ப: மடியிலான
தாளுளாள் தாமரையி னாள்.

என்பதினால் மடிமை மூதேவிக்கு இருப்பிடமென்பதும், முயற்சி சிதேவிக்கு இருப்பிடமென்பதும் அறியலாம். அவிநய இலக்கணம் கூறும் பண்டை நூலாசிரியர் மடிமைக் குணத்திற்கு இலக்கணங் கூறுமிடத்தே சோம்பேறிகளின்

தன்மையை நன்கு புலப்படுத்தியுள்ளார். அதை அடியிற் காண்க.

*மடியின் அவிநயம் வகுக்குங் காலை,
நொடியொடு பலகொட் டாவிவிதிச் குடைமையும்
மூரி நிமிர்த்தல் முனிவொடு புணர்தலும்
காரணம் இன்றி ஆழ்ந்துமடிந் திருத்தலும்
பிணியு மின்றிச் சோர்ந்த செலவொடு
அணிதரு புலவர் ஆய்ந்தனர் என்ப.

இங்ஙனம் விரல்களை நொடித்தலும், தூங்குமூஞ்சிகளாகிக் கொட்டாவி யிடுதலும், எப்பொழுதும் மன எழுச்சியின்றிச் சோர்வுறுதலும் சோம்பேறிகளுக்கு இலக்கணமாகக் கூறியிருத்தல் மிகவும் வியக்கத் தக்கதொன்றே. இங்ஙனம் இழித்துக் கூறப்படும் சோம்பலாகிய களையை வேருடன் களைந்து ஊக்கமாகிய நீரைவார்த்து, முயற்சியாகிய பயிரை வளர்த்தால் பொருள் புகழ் முதலாகிய பலன்களை யடையலாம். தற்காலத்தில் நம்நாட்டார் அம்முயற்சியின் பெருமையை நன்கு கவனிக்கவேண்டியவர்களாதலின், இதைப்பற்றி இங்கே இவ்வளவு எழுதநேர்ந்தது. அந்நிய நாடு சிலவற்றில் சோம்பேறிகளான பிச்சைக்காரர்களுக்குப் பிச்சையிடக்கூடாதெனவும், அப்படிவருகிற பிச்சைக்காரர்கட்குச் சட்டப்படி தண்டனை உண்டெனவும் விதியேற்படுத்தி யிருக்கின்றனர். இது, ஜனசமூகத்தார் கவனம், முயற்சியிற் செல்லச் செய்வதற்கு ஏற்ற மார்க்கமென்றே தோன்றுகிற தல்லவா? முயற்சி செய்யத்தக்க சக்தியுடையார் யாவரும் முயற்சி செய்தே ஜீவிக்கவேண்டும்.

* சிலப்பதிகார வுரை.

ஏழைகள் சோம்பேறிகளாகிப் பிச்சை யேற்பதைக் கடிந்து பேசினோம். செல்வர்களிலும் பலர் செல்வச் செருக்கால் சோம்பேறிகளாய் விருதாக் காலக்ஷேபஞ் செய்கின்றனர். இவர்கள் செல்வத்தை முயற்சி வகையிற் செலுத்துவார்களாயின், நம் நாட்டுக்கு மிகவும் நன்மை யுண்டாகும். இவர்கள் செல்வமும் பெருகும். இவர்கள் இதைக் கவனிப்பதில்லை. விலாப்புடைக்கத் தின்பதும், ஆட்டுச்சண்டை, கோழிச்சண்டை, ஜல்லிக்கட்டு, பக்ஷிகளைச் சுடுதல் முதலான தகாத காரியங்களையே தமக்குத் தொழிலாகக்கொண்டும் வாணாளை வீணாளாக்கி மடிகின்றனர். அந்தோ! இந்த மந்தமதிகளைச் சேர்ந்த மாந்தர்களும் "பேஷ் பேஷ்" என்று இச்சகம்பேசி வருகிறார்களேயன்றி, இடித்துக் கூறுவாரில்லையே! யாரேனும் இடித்துரைக்க வந்தாலும் அவர்களைக் கடிந்துரைக்க வருகின்றனரே! செல்வர்கள் மட்டும் முயற்சியின் பெருமையையும், பலனையும் கவனித்துத் தங்கள் மனதைச்செலுத்த முன்வருவார்களானால் நம்நாட்டுக்குவறுமையென்பது வறுமைப்பட்டொழியுமே!

ஐயோ! தக்க முயற்சியின்றிச் சோம்பித் திரிந்து, தம் வாழ்நாளை வீழ்நாளாக்கிவரும் இவ் அவிவேக பூரணர்கள்,

தேனீ யினது தினசரி உழைப்பே
உலையா முயற்சி உளனுக் கியதென
எண்ணித் துணியும் எறும்பினைக் கண்டும்
பின்னே வேண்டுவ இன்னே தேடா
திருக்க யாரால் இயலும்? என்ற

அறிவு சான்ற ஏழை இடையனையும், அவன் தனது ஆசிரியர்களாகக்கொண்டு, பின்பற்றிய சிற்றுயிர்களையும் வழிபட்டேனும் மெய்யறிவும் மேன்மையும் எய்தலாகாதா?

ஆதலால் ஏழைகள், பணக்காரர் யாவரும் அவரவர்க்குத் தக்கவகையில் முயற்சிசெய்து, பொருளும் புகழும் புண்ணியமு மடைந்து,தேசக்ஷேமத்தை உண்டாக்கும்படி கடவுள் கருணை செய்வாராக.

இனி நாம் முன் ஆரம்பத்திற்கூறிய "முயற்சி திருவினையாக்கும்" என்பதன் கருத்தைச் சிறிது நன்காராய்வாம். "திரு" என்றால் "இலக்குமி" ஆதலின், முயற்சியுடையார்க்கு இலக்குமி கடாக்ஷமுண்டு என்பது விளங்கும். தனம், தானியம், தைரியம், வீரம், ஜயம் முதலியவற்றிற்கு அதிதேவதை இவளேயாதலின், முயற்சி யுடையார்க்கே அஷ்டஐசுவரியமும் வித்திக்கும் என்று தெரிந்துகொள்ளலாம். ஆயினும் நீர்ப்பூக்கள் நீர்க்குத் தக்கபடி உயர்வது போல, மனிதர்கள், தத்தம் முயற்சிக்குத் தக்கபடி பயன் அடைகிறார்கள்.

ஒருவற்கு இடம், பொருள், ஏவல், உடல்வலி, கூரிய மதி, நற்கேள்வி முதலியன இருந்தும், ஊக்கம் ஒன்றில்லையேல், அவனது அரும்பேறுகள் அனைத்தும் அற்பமும் பயன்பெறா. இதுபற்றியன்றோ செந்நாப்புலவர்,

உடைய ரெனப்படுவ தூக்கம்; அஃதில்லார்
உடையர் உடையரோ மற்று.

என்றனர்.

தெய்வச் செயலாலும், மானிடக் குற்றத்தாலும் நேரிடும் இடையூறுகளால் காரியத்தாழ்ச்சி உண்டாகும்போது, அநேகர் புத்தி மயங்கிச் சிந்தை மாழ்குகின்றனர். மனமுறிந்து இடர்ப்படும் இன்னோர்க்கு அமிர்த சஞ்சீவியாகவும், அற்புத வரமாகவும் நின்று உதவுவது விடாமுயற்சியே.

தெய்வப்புலவா தமது திருப் "பொதுமறை" யாகிய திருக்குறளில் தொழில் செய்கையில் 'மன எழுச்சி' உண்டாயிருக்கவேண்டும் என உணர்த்தும், 'ஊக்கமுடைமை' "தொழில்களைச் செய்யும்போது சோம்புதலே 'கூடாது' என உணர்த்தும் "மடியின்மை" "சோம்பல் இல்லாவிடத்தும், மேன்மேலும் முயற்சியிருந்தாலன்றிக் காரியம் முடியாது" என்பதை உணர்த்தும், "ஆள்வினையுடைமை" "தொழிலில் முயலுவோர் பொருளிலாக் காரணத்தினலாவது,மெய்வருத்தத்தினலாவது துன்பம் நேரிட்ட விடத்து மனங்கலங்கக் கூடாது" என்பதையுணர்த்தும் "இடுக்கண் அழியாமை" என்னும் நான்கு அதிகாரங்களைக் கொண்டு "விடாமுயற்சி" என்ற இவ்வொரே விஷயத்தை எதிர்மறையினுலும், உடன்பாட்டினுலும் வற்புறுத்திக் கூறியிருக்கும் அழகும், அருமையும் என்னே !

பூர்வம் அமிர்தம் பெறவேண்டி அமரர்கள் பாற்கடலைக்கடைந்த போது, முதலில் தோன்றியது ஆலகால விஷமன்ருே? ஆ! "முதற்கோணல்முற்றுங்கோணல்" என்று நடுங்கித் தாம் எடுத்த காரியத்தை அவர்கள் கைவிட்டனரா? ஊக்கம் மேலிட்டுச் சோம்பலை ஒழித்துத் தம் துன்பத்திற்கு அஞ்சாது மேன்மேலும் அன்ருே, தாம் எடுத்த வேலையை முடிக்கத் தீர்மானித்தார்கள்? இரத்தினப்பெரும் குவியல்களையும்,வேண்டுவார் வேண்டியாங்கு ஈயும் ஐந்தருக்களையும், சுரபி, சிந்தாமணி முதலியவற்றையும் அடைந்தவுடன் மகிழ்ந்து மயங்கி நின்ருர்களா? மூத்தாள் தோன்றியகாலத்தும் முயற்சி கலங்கினரா? அமிர்தத்தை அடைந்து தீரும்வரை, தாம் எடுத்துக்கொண்ட காரியத்தைக் கைசோர விடவில்லையே! "அசாத்தியம்"

என்பது 'அவிவேகிகளின் அகராதியில் காணப்படும் சொல்' என்று நெப்போலியன் என்னும் அசகாயசூரன் நிலமறியப் புகன்றதை யாவரும் நினைப்பார்களாக.

"உலையா முயற்சி களைகணு" உறுபயனுற்ற உத்தம ஸ்திரீ புருஷர்களின் வரலாற்றினை நம் பரத கண்டத்துப் பழஞ்சரிதங்களிற் பரக்கக்காணலாம். அன்னோர் வரலாற்றையும் ஈங்கெடுத்தறைவது அசாத்தியமாதலின், அவர்களில் முன்பு கூறப்பட்டவர்களைநீக்கி வேறு சிலரைமட்டும் உதாரணமாக ஈங்கு எடுத்தோதுவாம். அவர்கள் யாவர்:—

அற்பஆயுள் வாய்ந்த சத்தியவானை மணந்து அவனது ஆருயிர் கவரவந்த கூற்றுவனையும் வசப்படுத்தித் தன் கணவன் தீர்க்காயுளும், மாமன் மாமியார் நேத்திரப்பேறும் அரசும் பெறச்செய்த சாவித்திரியும், கலியின் சூழ்ச்சியால், "மதியிழந்து மாயக்கவறுடி" அரசிழந்து தனது கணவன் "தன்னைக்கானகத்தே காரிருளிற்கைவிட்டு" அகன்றகாலத்தும் குன்றா ஊக்கத்துடன் அவனைத்தேடுவித்து, ஒரு தந்திரத்தினல் அவனைத் தன் தந்தைபால் வருவித்து, அவனுக்குற்ற இடுக்கண் நீக்கி நிகரற்ற வாழ்வு பெற்ற தமயந்தியும், க்ஷத்திரியராய்ப் பிறந்தும் முயற்சிவலியால் தேவரும் யாவரும் வியப்பப் பிரமரிஷியான விசுவாமித்திரரும், மாற்றாந்தாயின் கொடுஞ்சொற் பொறாது கொடிய கானகம் புக்கு, அங்கு நேர்ந்த எவ்வித சோதனைக்கும் இடம் தராமல், அருந்தவமியற்றி, ஈசுவரானுக்கிரகம் பெற்று, பெற்றோரையும், உற்றோரையும் வாழ்வுறச் செய்து "எத்தாரகைக்கும், முனிவர்க்கும் மேற்சென்றிருக்கும்" படியான பெரும்பேறு பெற்ற துருவனுமே.

இக்காலத்தும் நமது சென்னை ராஜதானியிலேயே தோன்றிய ஸ்ரீ த. மாதவராவ், ஸ்ரீ தி. முத்துசாமி ஐயர், ஸ்ரீ அ. சேஷைய சாஸ்திரியார், ஸ்ரீ கு. சேஷாத்திரி ஐயர், ரிஷியூர் ஸ்ரீ வே. ஸ்ரீநிவாஸையர் முதலியோருடைய ஜீவிய சரித்திரமானது "ஒருவனுக்கு முன்னுக்குவர விருப்பமுண்டாயின், அவன் விடாமுயற்சியோடிருக்கக்கடவன்" என்று பறையறையுமன்றோ?

இனி, மேற்றிசையோரினும் ஊக்கமும் உலையா முயற்சியுமே மேற்கொண்டு, காரியசித்திபெற்ற பலரிற் சிலரை உதாரணம்கூறி இவ்விஷயத்தை நிறுத்துவோம்.

நிர்வாகமற்றவனுயிருந்தும், தான் உத்தேசித்தகப்பல் யாத்திரைக்காத் தனக்கு உதவிசெய்யப் பலதேசத்து அரசர்களிடத்தும், பிரபுக்களிடத்தும் பத்து வருடங்களுக்கு அதிகமாக விண்ணப்பஞ்செய்து, வெகு பிரயாசைப்பட்டுக் கடைசியாய்ப் பழங்கப்பல்கள் மூன்றேபெற்றுப் புறப்பட்டுச் செல்கையில், பலவிதமான இடையூறுகளுக்குள்ளாகிய காலத்தும், அதி மூர்க்கமாய்த் தன்னையே கொன்று போடக்கப்பலோட்டிகள் துணிந்தகாலத்தும், மனமுறிந்து போகாமல், அவர்களுக்கு இதங்கூறி, மேலும் மேலும் சென்று* அமெரிக்காவைக்கண்டுபிடித்த கோலம்பஸையும்,

திக்கித் திக்கிப் பிதற்றும் வாயையும், தாழ்ந்த குரலையும், பல விகார அபிநயங்களையும் இயற்கையிலேயே வாய்க்கப் பெற்றும், சிறிதும் மனஞ்சலியாது தினந்தோறும் உற்சாகத்தோடு கொஞ்சம் கொஞ்சமாய் முயன்று, அவ்

* இது இப்பொழுது மேலைத்திசையில் உள்ள பல தேசங்களில் ஒன்றாய், நாகரிகத்திலும் ஐசுவரியத்திலும், வல்லமையிலும் சிறந்து விளங்குகிறது.

அவலக்ஷணங்களை அறவே அகற்றிச் "சிறந்த நாவலர்" எனச் சிறப்புப் பெயர் பெற்றேங்கிய கிரேக்க சிரேட்டராகிய டெமாஸ்தனீஸையும்,

ஆறுமுறை யுத்தத்தில் தோல்வியடைந்து, மனந் தளர்ந்து பகைவர்க்கு அஞ்சியோடி ஒரு குடிசையிலிருந்த காலத்தில், அக்குடிசை முகட்டில் வலைசெய்ய எண்ணிய சிலம்பி ஒன்று, தனது நூலில் ஒருமுனையை ஒரு உத்திரத்தில்கட்டி மறுமுனையை மறுஉத்திரத்தில் தொடுக்க அந் நூலில் ஊசலாடி ஆறுமுறை முயன்றும் காரியசித்திபெரு மல், ஏழாவது முறை அதிக வேகத்துடன் ஊசலாடி, அந் நூலை உத்திரத்திற் சேர்த்ததைக் கண்கொட்டாமல், பார்த் துக்கொண்டிருந்து, அறுமுறை அபஜயப்பட்ட தனதுநிலை மையும் அவ்வணமே ஆகுக என்று தீர்மானித்து, ஏழா முறை சண்டைக்குச்சென்று,ஜயம்பெற்று ஸ்காட்லண்டின் சுவாதீனத்தை ஸ்தாபித்த ராபர்ட் புரூஸ் மன்னனையும், ஆங்கிலம் கற்று உயர்தரக்கல்வி பெற்ற எல்லோரும் அறியாமற் போகார்கள்.

கடைசியாக நாம் சொல்லவேண்டுவதிங்கொன்றுண்டு. காரியசித்திபெற விரும்புவோர் "ஒருநாள் சுறுசுறுப்பாய் இருந்து, ஒருநாள் சோம்பலாய் இருப்பதினுலேயும்,கொஞ் சக்காலம் ஒன்றைத்தொடங்கிப் பிறகு அதைவிட்டுச் சில காலம் வேறென்றிற்பிரவேசிப்பதினுலேயும் பிரயோஜனம் உண்டாகமாட்டாது" என்பதை மனத்திலிருத்துவார்க ளாக. ஒருவன் எவ்வளவு மந்தனுப் இருந்தபோதிலும் "எறும்பூரக் கல்லுந்தேயும்" என்றபழமொழிப்படி மனஞ் சலியாது உற்சாகத்தோடு சிறிதுசிறிதாக உழைத்து வரு வானேயானுல் எப்படியும்முடிவில் காரியசித்தி பெறுவான்.

---

## V. தெய்வ நீதி.

இவ்வுலக இன்பங்கள் பயனற்றன எனத்தெளிந்து, ஐம்பொறிகளையும் புலன்களின் வழிச் செல்லாமல் அடக்கி, நாட்டைத் துறந்து காட்டில் தவம் புரியும் பலர், அநாதி காலம் தொட்டு நிறைந்து விளங்குவது நம்மிந்திய தேசம். இத்தேசத்தின் தென்கோடியிற் போதிகை என்ற ஒரு பொருப்பு இருக்கிறது. ஆரமுதம் போலும் அருந்தமிழைத் தானீந்த ஆரண முனிவராகிய அகஸ்தியர் போன்ற பல பெரியோர்கள், அதில் எப்போதும் உறைகின்றனர். வான் முகிலின் கார்நிறமும், சோலைகளின் பசுமை நிறமும் என்றும் அம்மலையைக் கவிந்திருப்பதால், பானுசஞ்சாரமே அங்குக் காண்பதரிது. பரிசுத்தமான பெரியோர்களுடைய மனம்போல் தெளிந்த நீரையுடைய பல ஓடைகள் வற்றுமல் அங்கு ஓடிக்கொண்டே இருக்கும். ஆதரித்தவர்களுக்குப் பலனளிக்கும் பெரியோர் போல, மா, பலா, வாழை முதலிய பழமரங்கள் பறவைகளுக்கும், குரங்கு, அணில் முதலிய பிராணிகளுக்கும், தேனொழுகிக்கொண் டிருக்கும் இனிய கனிகளைக் கனிந்தளிக்கும். மல்லிகை, முல்லை, இருவாட்சி, பிச்சி, ரோஜா, சண்பகம் முதலிய மலர்கள் இரப்போரைக்கண்ட வள்ளியோர் முகங்கள்போல் அலர்ந்திருக்கும். துன்புறுத்துவோர்க்கும் நன்மையே தரும் நல்லோர் போல், தன்னை அகழ்ந்தார்க்கும் இம்மலை அரியபல மூலங்களை அளிக்கும். நல்லாரும் பொல்லாரும் கலந்திருத்தல் போல, ஆன், மான், யானைகளுடன் புலி, கரடி, சிங்கம் முதலிய பிராணிகளும் அங்கு வசிக்கும்.

இத்தகைய பொதிகையின் சோலைகள் ஒன்றில் மாசிலாமனமும், காசிலா ஒழுக்கமும் பூண்ட முனிவர் ஒருவர் இருந்தனர். இவர் 'நரை வருமென்றெண்ணி, இந் நல்லறிவாளர் குழவியிடத்தே துறந்தவர். நல்ல தவத்தையே சிறந்ததெனத் துணிந்து அங்கு வந்தவர். கடவுளையன்றி எவரையும் கருதாதவர்.

இம்முனிவர் மனத்தில் ஒருநாள் ஐயம் பிறந்தது. அது நல்லோர் துன்புறலும், அல்லோர், இன்புறலும் ஏனோ என்பதே. சலனமில்லாத தண்ணீரில் பிரதி பிம்பிக்கும் பொருள்கள், ஒரு சிறுகல்லை அந்நீரில் எறிந்த மாத்திரத்தில், சலித்துக் காட்டுவதுபோல், சலனமற்றிருந்த அவருடைய மனது சலனம் அடைந்தது. 'உலகத்தில் நிகழும் கருமங்கள்யாவும் கடவுள் கட்டளைப்படி நிகழ்கின்றன வென்றால், நல்லோர் நன்மையும், தீயோர் தீமையும் அடைதலல்லவாமுறை? அப்படி நடவாததற்குக் காரணம் என்ன? கடவுளுக்குப் பாரபக்ஷம் இருப்பின், சர்வதயாபரர் என்ற பெயர் அவருக்கு எங்ஙனம் பொருந்தும்? சந்தேக விபரீதங்களின்றி உள்ளதுள்ளபடியே உண்மையை அறிய வேண்டும்' என எண்ணி, உலகியலறியுமாறு அம்மலையினின்று புறப்பட்டு நகர் நோக்கிச் சென்றார்.

அப்பொழுது சூரியன் உதயமானான். இவர் சிறிது தூரம் சென்ற பின்னர் களைப்பு மேலிட்டு ஒரு மரத்தடியில் தங்கிப் பிறகு எழுந்து செல்கையில், ஒரு குறுக்குப்பாதை வழி வாலிபன் ஒருவன் வந்துகொண் டிருந்தான். அவன் சிறுவனாயினும் முகத்தில் தேசு நிரம்பியவன். முனிவர் சிறிது நின்று, அவனைப் பார்த்தார். அவன் அத்துறவியை அணுகி, அடிகாள்! நும்திருவடி போற்றி 'என்றலும், முனி

வர், மைந்த! நீ சிரஞ்சீவியாய் வாழ்க' என்று ஆசிகூறினர். பிறகு அவ்விருவரும் பல வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டு ஒரு வழியே போயினர்.

இவ்விருவரும் வயதினால் ஏற்றத் தாழ்வு உடையராயினும், உணர்வில் ஒத்திருந்தவர் போலவே காணப்பட்டார்கள். ஒருவரை யொருவர் பிரிய மனமில்லாதவர்களாய் நீண்ட தூரம் அவர்கள் நடந்து போயினர். நெடுந்தூரம் அவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த வெங்கதிரோன், அவர்கள் நடைக்குத் தோற்றவன் போற் கடலில் மறைந்திட்டான். அதன் பிறகு சிறிது தூரம் நடந்து அவர்கள் 'எங்காம் புகலிடம் என்றெண்ணி, இருள் வழி போய் வெங்கா னகம்திரியும் வேலைதனில் அங்கோர்' பெரியமனை தென்பட அதை நோக்கிச் சென்றனர்.

அவர்கள் வரவை வேலைக்காரன் அவ்வீட்டின் யஜமானற்குத் தெரிவிக்க, அவனுடனே விரைந்துவந்து, அவர்களைத்தன் வீட்டிற்கு இட்டுச் சென்று, அமுதம் போலு மினிய உணவை அழகிய வெள்ளிப் பாத்திரங்களில் அளித்தான். பிறகு தன் மேம்பாடு தோன்ற அவர்களைத் தன்னுடன் அழைத்துச் சென்று, அவ்வில்லத்துள்ள பல கட்டிடங்கள், ஆடுமாடுகள், ஆடை ஆபரணங்கள், தானியங்கள் முதலிய பலவற்றைக் காண்பித்தான். விருந்தினர் இருவரும் அவ்விரவை அங்கே கழித்தனர். சொன்னக் குன்றைச் சுதந்தர மாக்கிய அவனது நல்லெண்ணத்தை எண்ணி யெண்ணி மகிழ்ந்தனர்.

உலகமாந்தர் புரியும் காரியங்களை நாடோறுங் கண்டு கண்டு கடவுட்குச் சான்றுரைப்பான் போல், ஆதித்தன் உதயமானன். முனிவரும் அவரோடுவந்த வாலிபனும் தம்

மை உபசரித்தானிடம் சென்று, வெளிச்செல்ல அநுமதி வேண்டினர். அவனவர்களுக்குத் திருப்தியுண்டாகும்படி நல்லுணவிட்டு, உபசரித்து வழியனுப்பினன். அவர்கள் செல்லுமுன், எவரும் எதிர்பாராசம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அவ்வீட்டிலிருந்த விலையேறப்பெற்ற பொற்கலனென்றைவாலிபன் கவர்ந்து செல்லலானன். இது அப்பொழுது முனிவர்க்குத் தெரியாது. சிறிதுதூரம் சென்றபிறகு, அச்சிறுவன் அவருக்கு அக்கலனைக் காண்பித்தனன். என்ன செய்வார் முனிவர்! "தனக்குப்பால்வார்த்து வளர்ப்போரையே கொல்லும் பாம்பே இவன்; இவன் அன்னமிட்ட வீட்டிற்கன்னமிட்டது. எவ்வளவு அநீதியான செயல்! உண்ட வீட்டிற் கெண்டி திருடிய இவனுக்கு மனச்சாட்சி என்பது அணுவளவும் இல்லையே" என்று தமக்குள் எண்ணிப் பசுத்தோல் போர்த்துப் பாய்புலிபோன்ற இவன் காரியங்களை முழுதும் அறிய வேண்டுமென்று பிரிய விடாது அவனைப் பின்தொடர்ந்தனர்.

அவ்விருவரும் காட்டுவழியே உணவின்றி நடந்து கொண்டிருக்கையில், மாலைப்பொழுது குறுகிற்று. அஞ்ஞானம் அறிவிலிகளைச் சூழ்வதுபோல், கார்மேகம் ககனத்தை மறைத்துவிட்டது. கனவேகத்துடன் காற்று வீசியது. வானம் மழை பொழியத் தலைப்பட்டது. நமது பிரயாணிகள் நனைந்து வருந்தித் திகைத்துக்கொண் டிருக்கையில், சமீபத்தில் ஒரு விளக்கு வெளிச்சம் தெரிந்தது.

இவ் விருவரும் மெதுவாய் நடந்து சென்று, அவ்வொளியைக் கிட்டலும், அதனருகில் ஒரு வீடு காணப்பட்டது. அவ் வீட்டின் கதவை யாரேனும் திறப்பார்களென்று வெகுநேரம் அவர்கள் ஆவலுடன் எதிர்நோக்கி

நின்றும், ஒருவரும் திறக்கவில்லை. குளிர்பொறுது அவர்கள் கதவைப்புடைத்தனர். அவ்வீட்டிற்குரியோன் தட்டும் அரவத்தைக் கேட்டனன். அவன்,

கடுகளவும் ஈயாத கன்னெஞ்சன் காகம்
கைச்சோற்றுப் பருக்கையுறக் கடியாத புல்லன்
படுபதகன் அவன்வாயில் படியண்டை நின்று
பசிக்கொடுமை யாலவர்கள் பனியின்றிக் காத்தார்
ஓயாது கூவுமவர் உரைகேட்டே அன்னுன்
உவர்ப்புடனே கதவதனை உட்கியுடன் திறந்தான்
ஈயாத அவன்பறக்கும் ஈயென்னும் பெயரை
இருகாதிற் கேட்டாலும் இயம்புவனில் என்றே.

அப்பதகன் முணுமுணுத்துக் கொண்டே அவர்களை உள்ளழைத்துச் சென்று மனமில்லாமலே அற்பச் சோறிட்டான். ஒருக்கால் இவ்விருந்தினர்கள் மறுவேளையும் அங்குத் தங்கிவிட்டால், அவர்களுக்குச் சோறு கொட்ட வேண்டிவருமே என்றெண்ணிய அந்த உலோபி,

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை

என்ற அறமொழியைப் புறமேதள்ளி, மழை நின்றதும் அவர்களைப் பார்த்துப், "பெரியோர்களே! நீங்கள் வெகுதூரம் செல்பவர்கள்போற் காணப்படுகிறீர்கள். மழை நின்றேவிட்டது; அருணோதயமுமாகிறது. ஆதலாற் சூரியவெப்பம் அதிகரிக்குமுன் குளிர்ந்த வேளையிற்புறப்படப் பிரியப்படுவீர்கள் என்றெண்ணுகிறேன்" என்ன, அவர்களும் எழுந்து சென்றனர்.

முனிவருக்கு அவ்வீட்டுக்காரன் மனநிலை நன்கு தெரிந்தது. ஐயோ! அற்பக்கஞ்சிக்கு இவனிப்படிச் சங்கடப் பட்டானே. அந்தோ!

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே

அற்றார் அழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி

என்பவற்றை அறியாத மூட மூர்க்கன் என்று தமக்குள் இரங்கினர்.

முனிவரைப் பின்பற்றி வந்த இளைஞன் முன்னாளிரவில் கவர்ந்த பொற்கலத்தை இரண்டாநாளிரவில் தங்கிய உலுத்தன் வீட்டில் வைத்துவிட்டுச் சென்றான். இது முனிவர்க்குத் தெரியவே அவர் பெரிதும் இறும்பூது எய்தி, 'முன்னாளிரவு உண்ட வீட்டிற் கிரண்டகம் செய்து அதி பாவத்தை இவ்வாலிபன சம்பாதித்தான். தான்திருடிய கலனைப் பின்னாளிரவில் தங்கிய உலோபி வீட்டில் வலிய வைத்துப்போகிறான். இவன் அறிவிலியோ, பித்தனோ?' என்று அவன் செய்கைமுழுதையும் அறிய ஆவல்கொண்டு அவனுடன் பின்னும் சென்றனர்.

இவ்விருவரும் அங்கிருந்து புறப்பட்டுப் பகல்முழுதும் வழியிற்கிடைத்த பல பழவகைகளை யருந்திச் செல்லுகையில், இவ்விளைஞன் செய்கையை ஒளித்திருந்து பார்ப்பவன் போல் அருக்கன் மேற்கடலில் மூழ்கினான். அச்சமயம் ஒரு சிற்றூரை அவர்களடைந்து, ஒருவீட்டு வாயலில் உட்கார்ந்தனர். அவ்வீடு ஒரு வேளாளனது. "வேளாளனென்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்பதற்கிலக்கியமாய் அவ்வில்லத்தான் மெத்த சிக்கனமும்,பலர் மெச்சும் செலவுகளும் இல்லாதவன் என்பதை அவனுடைய வீடே நன்கு தெரிவித்தது. பாத்திரமறிந்து பிச்சைதரும் அவன், வந்த

இருவரையும் பார்த்து அவர்கட்குச் சாஷ்டாங்கமாய்த் தண்டம் சமர்ப்பித்து "பெரியீர்! என்முன்னோர் செய்த தவப்பயனால் என்னகத்திற் புகுந்து, அதைப்புனிதப் படுத்தினீர்கள். வழிநடந்துவந்ததால் இளைப்புற்றவர்களாக நீங்கள் காணப்படுகிறீர்கள். இன்றிரா அடியேனகத்தில் தங்கி இருந்து, பிறகு, இஷ்டம் போகலாம்" என்று கூறி உபசாரத்தோடு உணவளிக்க, அவர்களுண்டு அங்கிருக்கையில், சிறிது பொழுது சன்மார்க்கத்தையும் சிலகாலம் பக்தியையும்பற்றிப் பேசிக்கொண்டிருந்து, நள்ளிரவு நண்ணலும் அயர்ந்து துயின்றனர்.

இராப் பொழுது கழிய, இவ்வுலகமாந்தரைப் பலகாரியங்களில் ஊக்கிடவருபவன்போல், சூரியன் தன்கரங்களை நீட்டிக்கொண்டு புறப்பட்டான். அதற்குச் சிறிதுமுன்னர் முனிவரைப் பின்பற்றிவந்த அச்சிறுவன், அவ்வீட்டின் வேளாளனது ஒரே குழந்தை துயிலும் கட்டிலைக்கிட்டி அம்மகவின் கழுத்தை நெறித்துக்கொன்றான்.

தன்மனைக்குவந்த முனிவரும், இளைஞனும் செலவு பெற்றுச் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம், வேளாளன் குழந்தையை வழக்கம்போற் கட்டிலினின்றெடுக்க, அது மூச்சில்லாதிருந்ததை யுணர்ந்து கீழே விழுந்து மூர்ச்சித்துப் பிறகு பலர்தேற்றத் தெளிந்து,

மறிந்தமகன் தனைமேவி எடுத்தவனை மடிசார்த்தி
மகனே ஈங்குக்
குறைந்ததவ மியற்றியவிப் பாவியிடம் வாழிலவம்
குறுத மென்ன
மறைந்தனையோ! வானுலக மடைந்தனையோ! நான் பெற்ற
வாழ்வே உன்னை
மறந்தினியான் உயிர்வாழ்தல் எதன்பொருட்டென் றறியேனே
வழுத்து வாயே.

மின்னுமை விடித்ததெனத் தீவினைஇங் கென்பக்கல்
விளைந்த சோதான்
பொன்னாரும் அருமருந்தாம் என்குழந்தாய் உனைப்பெறயான்
பொலிவு சான்ற
மின்னார்செஞ் சடைப்பெருமான் திருத்தாளைப் பன்னெடுநாள்
மேவி நின்றேன்
என்னேநின் மேலுறுபா சத்தாலவ் வீசனையும்
எண்ணி லேனே.
கொஞ்சிவிளை யாடுமென தருமருந்தே முன்னாள்செய்
கொடுமை யேன்யான்
நெஞ்சிலுறு முவகையினி எந்நாளிற் கொள்வேனோ
நீயிவ் வண்ணம்
துஞ்சிடுதல் யார்செய்தீ வினையோவென் கண்மணியே
சொல்வா யப்பா
பஞ்சுபடும் பாடுபடும் பாவிபெற்றுத் தேறுமொழி
பகர்வார் யாரே

என்று புலம்பி நின்றான்.

வேளாளன் செயலிதுவாக; தம்மைத் தொடர்ந்த இளைஞன் செய்த கொலைச் செயலை அவனே கூற அறிந்து 'அடடா! இவன் கோமுக வியாக்கிரமாக இருக்கிறான். நன்மை செய்தோர்க்குத் தீமையே செய்கிறான். பாவங்கள் எல்லாவற்றுள்ளும் சிசுக்கொலை அதிபாவமல்லவா? இக்குழந்தை இவனுக்கென்ன நோதகவு செய்தது? இவ்வில்லத்தான் தான் இவனுக்கென்ன அல்லல் புரிந்தான்? இப்புல்லன், எல்லாப் பிறவிகளிலும் பொல்லா நரகமே யடைவான். இனி இவனுடன் செல்லல் நல்ல காரியமன்று' என்று மனம் வருந்தி அவனைப் பிரிதற்கேற்ற வழியை நோக்கிக் கொண்டே சிறிதுதூரம் செல்லுகையில், ஒரு காட்டாறு அப்பாதையைக் குறுக்கிட்டது. இருவரும்

அதைக்கடந்து செல்ல வழிதெரியாது கலங்கி நின்றனர். அவ்வேளை அங்கு இவர்களை நன்குபசரித் தனுப்பிய வேளாளன் ஏவலால் ஒரு மனிதன் வந்து, அந்நதியைத் தாண்டிச் செல்லும் வழியைக் காண்பித்தான். அது குறு கியதாய்க் காட்டுமரங்கள் கொண்டே நதியூடே வகுக்கப் பட்டது. அதன்வழியே முதலில் அவ்வழிகாட்டி செல்ல, அவனைத் தொடர்ந்து நமது வாலிபனும் முனிவரும் சென் ருர்கள். அங்ஙனம் செல்லுகையில், படுபாதகம் செய்தற் கேற்ற பருவம் பார்த்திருந்தவன்போல், இவ்வாலிபன் அவ்வழிகாட்டியின் காலைத் தட்டிவிட, அவன் நட்டாற் றில் விழுந்து மூழ்கி இறந்தனன். இச்செயலைக் கண்டமுனி வருக்கு மனம் அடங்காச் சினம் மூண்டது. அவர் கண்கள் சிவந்தன. அவர் மனம் பறைபோற் படபடவென்றடித் தது. சிறிதுநேரம் பேச நாவெழாமல் செயலற்று நின்ருர். பிறகு அவ்வாலிபனைப் பார்த்து, 'அடாபாவி! நீ என்ன கதியடைவாயோ அறியேன். உன்னைச் சித்திரவதை செய் தாலும் என் சித்தம் திருப்தி அடையாது. மனித தண்ட னைக் கொருவேளை நீ தப்பினும், தெய்வ தண்டனைக்குத் தப்பிப் பிழையாய்; நீ மகாபாவி' என்றுகூறி அவனை யோர் அறை யறையக் கையோங்கினர்.

அச்சமயம் வாலிபன் பொருக்கென மறைந்தான். சோதிவடிவொடு தேவதூதன் ஒருவன் அவனிருந்த விடத்து நின்ருன். அவ்வற்புதத்தைக்கண்ட முனிவர் பேச நாவெழாது சிறிதுநேரம் பிரமித்து நின்ருர். அவரை யத் தேவதூதன் பார்த்து, 'மாசிலா மனமுடைய மானவரே! அஞ்சலிர். நும் அவலம் கெடுக. நும் பக்தியையும், தூய ஒழுக்கத்தையும் உற்றுணர்ந்து களிப்புற்ற எல்லாம் வல்ல கடவுள், நுமது மனத்திற்ருேன்றிய ஐயப்பாட்டை நீக்கி

84789

யருளுமாறு எனக்குக் கட்டளை இட்டதால் நான் இம் மண்ணுலகடைந்தேன். நலம் செய்தோர் தீமையும், தீமை புரிந்தவர் நன்மையும் அடைவதாகப் பார்வைக்குத் தோற்றினும் உண்மை அவ்வாறில்லை. ஈசன் சங்கற்பத்தை சிற்றறிவுடைய மனிதர் அறியமுடியுமா! 'நாழி முகவாது நானுழி.' நீர் என்னுடன் வந்த காலத்தில் நேர்ந்த நிகழ்ச்சிகளினும் ஆச்சரியமாயும் அக்கிரமமாயும் தோன்றும் காரியங்களை நீர் கண்டதுண்டா? இவற்றின் மர்மங்களை வெளியிடுகிறேன். அவற்றைக் கேட்ட பின்னரேனும் சந்தேகந்தீர்ந்து இவைபோலவே பிறவும் இருப்பனவென்று தேர்ந்து, சர்வ வல்லமையுள்ள கடவுள் செய்யும் எக்காரியமும் நமது நன்மைக்கே ஆம்' என்று துணிந்து கொள்வீராக.

நாம் முதலிற் சந்தித்த டாம்பிகப் பிரபுவானவன் எவ்வளவு உபசரணைகள் செய்தான். பிறர் தன்னை மெச்ச வேண்டுமென்று அவன் அவ்வாறு செய்தவனேயன்றி, பரோபகாரம் கருதி, எதுவும் செய்தவனல்லன் சாதாரண உணவை இலையில் இட்டாற் போதாதா? வெள்ளிப் பாத்திரத்தும் தங்கப் பாத்திரத்தும் பலவகை உணவுகளை அவனிட்டதே அவன் கருத்தைப் புலப்படுத்துமன்றோ! உபசரணைகள் பல செய்து மென்னை? அவன் எண்ணமன்றோ நேரியவழியில் இருத்தல் வேண்டும். தற்புகழ்ச்சி யொன்றே கருதிச் செய்யப்படும் எதனுலும், பெரும் புண்ணியத்தை யடைய எதுவின்றிப் போகிறது. நான் அவனைத் திருத்தி நல்வழிப்படுத்தவே, அவனது அரிய பொற்கலனை யபகரித்தேன். அதனைப் பறிகொடுத்தது முதல், அவனுக்கு நல்ல புத்தி வந்து, நல்லெண்ணத்துடனும் உள்ளன்புடனும் தருமம் செய்துவருகிறுன். என் காரியத்தால் அவனுக்கு நன்மையா தீமையா? யோசியும். இது நிற்க.

இரண்டாம் நாளிரவு நாம் சந்தித்த மனிதனே பரம உலுத்தன். அறமென்பது அவனுக்கு மறமாம். அத்தகையோன், நான் அவன் வீட்டில் வைத்த பொற்கலத்தை எதிர்பாராது அடைந்ததுமுதல், தருமகுணமும் தாரணசிந்தையும் உடயவனாய் இருக்கிறான். ஒருவேளை இரப்பவர்க்கு இட்டபுண்ணியப்பலனாக ஒருபொற்கிண்ணம் கிடைத்ததென்றும், இதுபோல் பலர்க்கு இட்டால், எல்லையில் அடங்காத நன்மைகள் உண்டாகுமென்றும் நிச்சயித்து, அவன் விருந்தினர்களைத் தேடி மிகுதியும் உபசரிக்கிறான். நேரிற் சென்றுபார்த்து உண்மையை அறியும். பின்பு நாம் சந்தித்த வேளாளன், புத்திரப்பேறின்றி வெகுநாள் தவங்கிடந்து, எம்பெருமானது அருளால் அக்குறை நீங்கப்பெற்றவன்.

அச்சனையன் தோன்றியபின் ஆதிபரம் பொருள்காணும்
பத்தியையே எண்ணிலனாய்ப் பழுதானான்; அதைநீக்கி
நித்தனவன் இன்னவனை நேர்வழியில் உய்த்திடவே
சித்தமதிற் கொண்டவன்சீர்ச் செம்மலைத்தன் தாள்சேர்த்தான்.

குழந்தையைப் பறிகொடுத்த பிறகு, அவன் பலவாறு கதறி அழுதுபுலம்பினான். 'தொடர்ந்தமும்மலமுருக்கி வெம்பவக்கடல் தொலைய, கடந்துளோர்களுங் கடப்பரே மக்கள் மேற்காதல்? ஆற்றினுமகப்பிரிவு ஆற்றலரிதன்றோ?' ஆயினும் இப்போதவன் ஒருவாறு மனந்தெளிந்து, இறைவனடியைச் சதா எத்தினவண்ணமாய் இருக்கின்றான். அதனால் அவன் அழிதலில்லாத பேரின்பநிலை எய்துவன். குழந்தை இருப்பின் அவன் ஒருபோதும் கடவுளை நினைக்கவேமாட்டான்; நல்வழி அடைந்திருக்கவும் மாட்டான். அவன்மெய்யான பக்தியை யுடையவனாய்விடின், வேண்டுவார் வேண்டுவன ஈயவல்ல கடவுளுக்கு மீண்டும் மகப்பேறு அளிப்பது ஒரு பாரமா?

இனி, நாம் கடைசியிற் சந்தித்தவன் நல்லொழுக்கமே அறியாத பொல்லாதவன்; அவன் கடவுளைக் கனவிலும் கருதாதவன். கொலையும், களவும், அவன் கூடப்பிறந்த குணங்கள். இன்றிரவுமட்டும், அவன் உயிருடன் வீடு திரும்பியிருப்பின், தன் யஜமானனுன உத்தமவேளாளனைக் கொன்று, அவன் பொருளையும் அபகரித்திருப்பான்.

அச்செயலை நிகழ்த்திடுமுன் அவனெழிந்தான் பலர்உய்ந்தார்
எச்சகமும் நனியருளும் இறைபுரியும் எச்செயலும்
இச்செயல்கள் போலமையும் இவற்றுளுறை அந்தரங்கம்
நிச்சயமாய் அறியாதார் நிகழ்த்திடுவர் பலவாறே

என்று இங்ஙனம் விரித்துரைத்து, அந்தர்த்தானமாயுள்ள தேவதூதனை முனிவர் பார்த்துத் தொழுதனர்.

பிறகு அவர் கடவுளை நினைத்து "எல்லா உலகங்களுக்கும் அவற்றிலுறையும் உயிர்களுக்கும் தந்தையாய் இருந்து, எவர் புரியும் காரியங்களையும், கருதும் எண்ணங்களையும், உள்ளவாறுணர்ந்து தக்கபலனளிக்கும் தலைவரே! இன்றே உமது நீதியை உள்ளவாறு உணர்ந்தேன்' என்று பலவாறு ஏத்தித் தொழுதார்.

இக்கதையால் ஈதறிக; ஈசுரசங் கற்பமதைத்
தக்கவழி உணர்ந்திடுதல் சாலவுமே அரிதாகும்
மிக்கவரு துன்பத்தும் மெய்க்கடவு ளனைவெறுத்துத்
துக்கத்தில் ஆழ்ந்துபல சொல்லிடுதல் தவருமால்.

---

## VI. காளமேகப் புலவா.

காளமேகப்புலவர் நவநவமாகக் கருத்தமைத்துக்கவி பாடி ஸ்தலதரிசனஞ் செய்துவருகையில், திருமலைராயன் பட்டணத்திற் கல்வியில் மிகச் சிறந்தவரென்று அவ்வரசன் வியந்துகொடுத்த தண்டிகைப்பரிசுபெற்ற புலவர்கள் அறு பத்து நால்வரும், அவர்களுக்குத்தலைவனாகிய அதிமதுரகவி என்பவனும் தமிழில் தங்களுக்குச் சமானம் ஒருவருமில்லை யென்று அகங்கரித்து, உலகத்திலுள்ள மற்றப் புலவர்களை யெல்லாம் மதியாமற் பலவாறாக நிந்தித்து, அவமானப் படுத்தி வருகிறார்களென்றும், அதற்குத் திருமலைராயனும் உடன்பட்டிருக்கிறானென்றும் கேள்விப்பட்டு, 'வித்வான் களா யிருப்பவர்கள் யாராயினுமென்ன, அப்படிப் பட்ட வர்களை அவமதிக்கலாமா? அவர்களை இகழ்ந்தது நம்மை இகழ்ந்ததல்லவா? பூர்வம் ஒட்டக்கூத்தனென்பவன், கற் றதுகையளவு கல்லா துலகளவு' என்றெண்ணாமல், தானே வித்தையில் அதிக வல்லவனென்று மமதைகொண்டு, நெஞ் சிரக்கமின்றிப் புலவர்களைச் சிரச்சேதம் பண்ணி வந்தது கண்டு, அக்காலத்திற் புகழேந்திப் புலவரானவர் அவ னுக்குத் தக்கபடி கர்வபிராயச்சித்தஞ் செய்வித்து, அநே கரைக் கொலைக்குத் தப்புவித்து, ரட்சித்துப் புண்ணியந் தேடிக்கொண்டார். அந்தப்படி இந்தக்காலத்தில் திருமலை ராயன் சமஸ்தானத்தி லிருக்கும் வித்வான்கள் நான் நானென்று இறுமாப்புற்று 'நக்குகிறநாய் செக்கென்றும், சிவலிங்க மென்றும் அறியாததுபோல்' நல்லார் பொல்

லாரென்று அறியாமலும் 'அடுக்கின் அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியாததுபோல்' பாடிய அருமை தெரியாமல் பிரசண்ட கவிகளையெல்லாம் பழித்துக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய அகந்தையை நாம்போய் அவசியம் அழிக்கவேண்டும்' என்ற பிரதிக்கினையுடனே ஒரு நாள் அவ்விடத்திற்குப் போகப்புறப்பட்டு, அப்பட்டணத்துக் கடைவீதியில் வந்தார்.

இவருக்கெதிரே மேற்சொல்லிய அதிமதுரகவி என்பவன் தனக்குப் பின்னும், முன்னும் இருபக்கங்களிலும் அறுபத்துநாலு தண்டிகைப் புலவர்களும் வரிசை வரிசையாய் நெருங்கிச் சூழ்ந்துவர, அவர்கள் நடுவில் நீலமலை போன்று, உரல்போலப் பருத்த கால்களும், பனைபோல நீண்ட துதிக்கையும், ஆலவட்டம்போலப் பரந்த செவிகளும், பிறைபோல் வளைந்த கொம்புகளும், மலைச்சிகரம் போல உன்னதமாகிய மத்தகமும், சாமரைபோல அசைகின்ற வாலும் பூண்டு எழுந்து நடப்பதுபோல நடக்கின்ற மதயானைமேல் நவரத்நமயமாகிய தவிசிட்டு ஏறி, துஜம்,சத்திரம், சாமரமுதலிய விருதுகள்பிடிக்க, கட்டியங்கூற, அதிக ஆடம்பரத்துடனே ராஜசமுகத்தை நாடிவருவதுகண்டு தாம் அப்பால் விலகிப்போகாமல் அப்புலவர்கள் ஏறிவரும் தண்டிகைக்கணைகளின் மத்தியில்வந்துநிற்க, அதுகண்டு கட்டியக்காரன் தண்டிகைக் கணைக் குட்பட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயினும் அவர்கள் தங்கள் வாயினால் அதிமதுரகவி என்பவனுக்குரிய விருதைச்சொல்வது நெடுநாளைய வழக்கமாயிருப்பதனால், அவன் வழக்கப்

படி இவர் மார்பிலே தன்கையிலிருந்த மான்தோற் பட்டையால் தட்டி 'அதிமதுரகவிராய சிங்கம்பராக் என்றுசொல்' என்றான். இவர் 'இழவுக்கு வந்தவர்களையெல்லாந் தாலியறுக்கச்சொன்னால் அறுப்பார்களா?' அதுபோலத் தெருவிலே போகிறவர் வருகிறவர்களையெல்லாம் இவன் பெருமையைச் சொல்லச்சொன்னாற் சொல்வார்களா? ஆயினும் இவன் பெற்ற பெருமைதா னென்ன? 'துடைப்பக்கட்டுக்குப் பட்டுக்குச்சுக் கட்டியதுபோல' 'அதிமதுர கவிராய சிங்கம்' என்றுபெயர் வைத்துக்கொண்டு, விருதுகூறி வருகிறானே! இவன் பாடும் பாட்டென்னை, அத்தனை மதுரமானதா? தன்னைச்சிங்கமென்று சொல்வதைப்பற்றிக்கொஞ்சமாவது இவனுக்குமனங்கூசவில்லையே! இவன் எத்தனைவித்வான்களைச் செயித்தான்? இவையெல்லாம் வீண்புகழ்ச்சிதானே! இப்படிப்பட்டவன் வெட்கித் தலையிறக்கங்கொள்ளும்படி இவனைப்பரிகாசிப்பதே யுக்தம் என்று நினைத்துக் கட்டியங் கூறுவோனை நோக்கி, 'அதிமதுரம் அதிமதுரமென்றுலகமெல்லாம் அறியும்படி பறைசாற்றினதுபோல் பல முறையும் எடுத்துச்சொல்லி இவனை மதுரந்தோன்றஸ்துதிசெய்கின்றையே! இவனிடத்திலுள்ள புதுமை என்னை? இப்படிச் சொல்வதைப்பார்க்கிலும், காட்டிலுண்டாகிய சரக்கு, காரமில்லாத சரக்கு, தனியே பிரயோகிக்காமல் வேறு சரக்குகளுடனே கூட்டிப் பிரயோகிக்கப்படும் சரக்காகிய மலைக்குன்றிமணிவேரே உலகத்தார் தொன்றுதொட்டு அதிமதுரமென்று வழங்குவது சகஜமாதலால் நீ அதைக்குறித்துச் சொல்' என்னுங் கருத்தை அமைத்து,

அதிமதுர மென்றே யகில மறியத்
துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்—புதுமையென்ன!
காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்குக்
கூட்டுச் சரக்கதனைக் கூறு.

என்றொரு பாடலைச் சொல்லி ஏளனம் பண்ணினர்.

அஃது அதிமதுரகவி என்பவனைத் தூக்கிப்போட்டாற் போ லிருந்ததனால், அவன் ஆச்சரியப்பட்டு 'சிறிதாவது பயமில்லாமல் இவ்வளவு தைரியத்துடனே பகிரங்கமாக நம்மைப் பரிகசிக்கின்றானே! இவன்யார்?' என்று அறியும் படி தான் ராஜசமுகத்திற்குப் போய்ச் சேர்ந்தமாத்திரத் திற் சேர்வைக்காரனொருவனை அனுப்பி, 'இன்னவிடத்தில் ஒரு பிராமணனிருக்கிறான். அவனுடைய பெயரென்ன? அவன் எங்கிருப்பவன்? என்று விசாரித்துவா' எனச்சொன் னான். சேர்வைக்காரன் நேரிலேவந்து விசாரித்தபொழுது காளமேகப் புலவர், 'என் பேர் ஊர் முதலானவைகளை வாய்ச்சொல்லாகச் சொன்னால் நான்சொன்னபடிநீபோய்ச் சொல்வது பிரயாசம். விவரமாய் ஏட்டில் என் கைப்பட எழுதிக்கொடுக்கிறேன்' என்பதாகச்சொல்லி,

தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித் துரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனிற்
பரணியொரு நாள்முழுதுமே

பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக்கொடி கட்டினேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினு னீடுபுகழ்
செய்யதிரு மலை ராயன்முன்
சீறுமா ருகவே தாறுமா றுகள்சொல்
திருட்டுக் கவிப் புலவரைக்
காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையி னெடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேகம் நானே

எனத்தாம் ஆசுகவி பாடுந் திறத்தைச் சிறப்பித்தும், தமது பெயரை வெளிப்படையாகச் செப்பியும், திருமலைராயன் சமஸ்தானத்து வித்துவான்கள் செய்யும் அக்கிரமத்தைக் குறிப்பித்து அவர்களை இகழ்ந்தும் ஒரு சீட்டுக்கவி எழுதி, அதைச் சுருட்டிச் செந்திரிகம் போட்டு, 'இதைக்கொண்டு போய்க்கொடு' என்று கொடுத்தனுப்பினர்.

அதிமதுரகவிராயன் முதலானவர்கள் அதைவாங்கி வாசித்து, 'இதை எழுதினவன் காளமேக மென்பவனு? பாம்புக்குப் பல்லிலும், தேளுக்கு வாலிலும் ஏகதேசமாய் விஷமிருக்கு மென்பார்கள்; இவனுக்கு உடல்முழுதும் விஷ மயமாயிருக்கிறது; ஆதலால் இவன் பொல்லாத துஷ்டன் என்றும், அகங்காரமே கால்கை முதலிய உறுப்புக்களாய் உருவெடுத்துவந்தவனென்றும் கண்டவர்கள் மேலெல்லாம் வம்புந் துன்புமாக வசைபாடுகிறவனென்றும், இவனுடைய

சமாசாரம் முன்னமே நமக்குக் கேள்விதானே. அப்படியிருக்க இப்பொழுது நம்மையும் அவர்களைப்போல இலேசாக நினைத்துக்கொண்டு, கொஞ்சமாவது மதிப்பில்லாமல் வாய்க்குவந்தபடி யெல்லாந் தூஷித்துச் சீட்டுக்கவி எழுதினன் 'பார்த்தையா! இப்படிப்பட்டவனைச் சும்மாவிடப்போமா?'; 'கொட்டினல்தேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சி' அல்லவா? ஆதலால், இவனைச் சிலிர்க்கச் சிலிர்க்க வலித்து மானபங்கப்படுத்தித் தக்க சிக்ஷை செய்வித்தாலொழிய இவன் அடங்கமாட்டான்' என்று தங்கள் அரசனுடனும் ஆலோசித்து, நாலுபேர் சேவகர்களை விடுத்து, அந்தக் காளமேகமென்பவன் எங்கேயாவது ஓடியொளித்துப் போகப்போகிறுன்! இந்த நொடிக்குள்ளே கைப்பிடியாகப் பிடித்துவந்து ஒப்பிக்கவேண்டும்' என்ன, அந்நால்வரும் போய்ப் பெரும்புலிகள்போல் அவரைச்சுற்றிக்கொண்டு 'நீ சும்மா வருகிறையா? உன்னைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போகவேண்டுமா?' என்றுர்கள். புலவர் 'நீங்களார் ? என்னை எங்கே அழைக்கிறீர்கள்?' என்ன, அவர்கள் நாங்கள் திருமலைராயன் சேவகர்கள், அவரிடத்திற்குத்தான் உன்னை அழைக்கிறோம்' என்ன, இவர், 'அங்கு ஏதுக்காக வரச்சொல்லுகிறீர்கள்?' என்ன, சேவகர், 'நீ எங்கள் ராஜசமஸ்தானத்து வித்வான்களைத் தூஷித்தாயே. அதற்காகத்தான்' என்ன, இவர் 'பின்னையொன்றுஞ் செய்யவில்லையே. இதற்குத்தானு பிடிக்கிறதுங் கட்டுகிறதும்? என்னைத் தொடவேண்டாம்; தூரநில்லுங்கள்; நானே வருகிறேன்' என்று, கடையில் எலுமிச்சம்பழம்

ஒன்று வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு ராஜசமுகத்தை நோக்கி வந்தார்.

இதற்குள் அவ்விடத்தில் அதிமதுரகவி யென்பவன் அறுபத்துநாலு தண்டிகைக்காரரையும் பார்த்துக் 'காளமேக மென்பவன் இவ்விடத்திற்கு வந்தால், அவன் அரசனருகிற் கிட்டிச் செல்லாதபடி நீங்களெல்லோரும் நெருங்கி உட்கார்ந்து உங்களாசனத்தைவிட்டெழுந்திராமலிருங்கள்' என்று திட்டஞ்செய்து, பின்பு ராஜாவை நோக்கி 'அந்த வம்பனைத் தாங்கள் வாவென் றழையாமலும், அவனுக்கு ஆசனங்கொடாமலும்,சம்மானஞ்செய்யாமலுமிருக்கவேண்டும்' என்று சொல்லி எச்சரிக்கையா யிருந்தான். அப்படியிருக்கையிற் புலவர் பெருமான் வந்துபார்த்து 'நாம் உட்பிரவேசிக்கக் கூடாமல் இங்கே ஏதோ மித்திரபேதம் நடந்திருக்கிறது, என்று கிரகித்துக்கொண்டு, தாம் உட்செல்லாமல் ஆஸ்தான வாசலண்டையி லிருந்தபடியே, 'இதற்கேற்ற உபாயமொன்று செய்யவேண்டும்' என்றுஒருசுலோகம் சொல்லி அரசனை ஆசீர்வதித்து, அந்த எலுமிச்சம் பழத்தை அவனுக்கெதிரே நீட்டினர். பிராமணர்கள் ஆசீர்வாதம் பண்ணி அட்சதையாவது, புஷ்பமாவது, மற்றேதாவது கொடுக்கவந்தால், வாங்காமலிருப்பது விதியல்லவே: அதுபற்றி அவன் தன் கையை நீட்டினன். நீட்டிய கையில் இந்த எலுமிச்சம் பழம் போய்ச் சேரவேண்டுமே, அதனல் யாவரும் விலகி வழிவிட்டார்கள். காளமேகப்புலவர் தாராளமாக அச்சபைநடுவே சென்று அதை வேந்தன் கையிற் கொடுக்க, அவன் வேண்டாம் எனறு சொல்லாமல் வாங்கிக்கொண்டதன்றி, அவருக்கு ஆசனங் கொடுக்கவும், உட்

காரும் என்று சொல்லவுமில்லை. அது தெரிந்து ஜம்புகேசுரத்தின் திசையைநோக்கி மானசிகமாக ஸ்ரீ அகிலாண்டவல்லி, விமானத்தைத்தரிசித்து, சாரதையை தியானித்து,

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனத்துவைத்த தாய்

என்பதை முதற்கொண்டமுப்பது வெண்பாவில் 'சரஸ்வதி மாலை' என ஒரு பிரபந்தம் பாடினார். பாடினமாத்திரத்தில் வாணி கடாட்சத்தால் திருமலைராயனிருந்த ஆசனம் ஒரு புறத்தில் வளர்ந்து இடங்கொடுக்க, அதில் அவர் அவனுடன் சமானஸ்கந்தமாய் வீற்றிருந்தார்.

இவ்விதமாக ராஜசிங்காதனம் வளர்ந்து இடங்கொடுக்க, அவர் அதன்மேலேறி உட்கார்ந்த தருணத்தில் அவர்களெல்லாரும் 'இஃதென்னை! மந்திரமோ! மாயமோ! அல்லது கண்கட்டு வித்தையோ!' என்று பிரமிப்புடனே பார்க்கையில்,புலவர்பெருமான் அந்தப் புலவர்களைநோக்கி, 'என்னை வைத்தகண் வாங்காமல் ஊடுருவப் பார்க்கிறீர்களே! நீங்களார்? தெரியச் சொல்லவேண்டும்' என்று கேட்க,அவர்கள் 'நாங்கள் இந்தச் சமஸ்தானத்திலிருக்கும் கவிராஜர்கள்' என்று உத்தரஞ்சொல்ல, இவர் கவிராஜரென்பதற்குக் குரங்கரசரென இடக்கராகப் பொருள்கொண்டு, குலுக்கென்று நகைத்து, அவர்களை உல்லங்கனம்பண்ணும்படி, 'ஓ! ஓ! புவியரசர்களாற் புகழப்படும் புலவர்களே! நீங்களாரென்று உங்களைக் கேட்டால் கவிராஜர்களென்கிறீர்களே; கவிராஜர்களாயிருந்தால், உங்கள் ஜாதி சுபாவப்படி

வாலிருக்கவேண்டும், அஃதெங்கே? வாலில்லாமையால் நீங்கள் வாலில்லாத குரங்குகளென் றல்லவோ சொல்லப் படுவீர்கள்? அப்படித்தானென்று ஒப்புக்கொண்டாலும், நீண்டுவளர்ந்து வலிபெற்ற நகமிருக்கவேண்டும், அஃதெங்கே? அல்லாமலும் நாலுகாலிருக்கவேண்டுமே, அவை எங்கே? காலாகக் கையைப் பாவித்துக்கொள்ளலாமென் றாலும், பிளைசார்ந்த கண்ணிருக்கவேண்டுமே, அஃதெங்கே? சொல்லுங்கள்'' என்னும் கருத்தினை உள்ளமைத்து,

வாலெங்கே நீண்டெழுந்த வல்லுகிரெங் கேநாலு
காலெங்கே யுள்வடிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்காள் நீங்கள்
கவிராய ரென்றிருந்தக் கால்.

என்றொரு வெண்பாப் பாடினார். இதிற் குரங்குகளென்று இழித்துரைத்தாலும், அவர்களைப்போலத் தாமும் புலவ ராகையால் அந்தச் சுஜாதி அபிமானம் போகாமல் 'புவிரா யர் போற்றும் புலவீர்காள்!' என்று சிறப்பித்தார்.

அதை அவர்கள் அவ்விதமாக நினையாமல், 'இவன் எட்டினால் குடுமியையும் எட்டாவிட்டால் காலையும் பிடிக் கிறவன்போல, இந்தப்பாட்டிலே நம்மையெல்லாம் குரங் குகளென்று பிரத்தியட்சத்திலேயே நிந்தித்து, அதனோடு கூடக்கொஞ்சம் முகஸ்துதியாகப் புவிராயர் போற்றும் புலவீர்காள்!, என்றான். முன்பு சீட்டுக்கவியிலும் தூஷித் திருக்கிறான்; இவனுடைய நெஞ்சுத் துணிவுதான் என்னை? என்று சிந்தித்துப் பிறகு அவரை நோக்கி, 'இந்தச் சமஸ் தானத்தில் வெகுகாலமாய்ப் பெயர்பெற்றிருக்கிற எங்களை இன்று வந்து முளைத்த நீ ஆரென்று கேட்கிறாயே, நீயார்? சொல்' என்று கேட்டார்கள். இவர் 'நம்மைக் காளமேகம்

என அறியீர்களா?' என்ன, அவர்கள் 'நீ காளமேகமா? நல்லது; காளமேகமென்பது கறுத்தமேகமானதால் மழை பொழியவேண்டுமே' என்ன, இவர் 'பொழியத்தான் வந்தது' என்ன, அவர்கள் 'எப்படிப் பொழிய வந்தது' என்ன, புலவர் சிரோமணி' கழியினிடத்திற் செல்லுங் கடல் நீரானது உப்புமயமா யிருப்பதென்று அதை ஒழித்து, சாஸ்திரமாகிய கடலில் அதன் சாரமாகிய நீரை முகந்து, அருவியாறு வழிந்தோடுகின்ற தமிழ் பிறந்த பொதியமலையிற் காலூன்றிக் கடுமையாகிய கவிகளைப் பாடுகின்றபுலவர்கள் மனத்தின் கண்ணே பயஞ்செனிக்க இடித்து, அவர்கள் காதுகள் செவிடுபடக் குமுறி, கண்கூச மின்னி, கவியாகிய மழைபொழியும்படி காளமேகமானது புறப்பட்டது'' என்னுங் கருத்தை அமைத்து, ஒருபாடல் பாடக்கேட்டு, அதிமதுரகவியென்பவன் அதிக ஆச்சரியங்கொண்டு, அவரை முன்னிட்டு "வெள்ளைக்கவி பாடித்திரிகின்ற காளமேகமே! மூச்சுவிடுவதற்கு முன்னே முந்நூறு அல்லது நானூறு பாடல் பாடப் போகாதா? மூச்சுவிட்டாயிற்றென்றால் ஐந்நூறு பாடல் வரையிலும் ஆகாதா? இதற்கித்தனை பேச்சென்ன? சும்மா ஆடம்பரமான உன்னுடைய கள்ளக்கவிக் கடையைப் பரப்பவேண்டாம்; அந்தமட்டிலே உன் கடையைக்கட்டு'' என்னுங் கருத்துத் தோன்ற,

**மூச்சுவிடு முன்னமே முந்நூறும் நானூறும்**
**ஆச்சென்றா லைந்நூற மாகாதோ—பேச்சென்ன**
**வெள்ளைக் கவிக்காள மேகமே யுன்னுடைய**
**கள்ளக் கவிக்கடையைக் கட்டு.**

என்றொரு பாடலைச் சொல்லி, அவன் தன் பெருமையை வெளியிட்டுக் கவிசிரேஷ்டராகிய இவரை இழிவுசெய்த

பொழுது, இவர் 'நீ மூச்சுவிடுகிறதற்கு முன்னே முந்நூறு நானூறுபாடல் வரையிலும், ஆச்சென்றால் ஐந்நூறுபாடல் வரையிலும் பாடுகிறதாகச் சொன்னையே, இதோ ராச்சரியமா? நான் சொல்வதைக் கேள்;

* இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
† அம்மென்றா லாயிரம்பாட் டாகாதா—சும்மா
இருந்தா விருப்பே னெழுந்தேனே யாயிற்
பெருங்காள மேகம் பிளாய்.

என்ற ஒரு கவிபாடித் தமது வல்லமையைக்குறிப்பித்தார்.

அதை அதிமதுரகவி கேட்டு, 'தூக்கி நிறுத்தடா, பிணக்காடாய் வெட்டுகிறேன்' என்பவனைப்போல வெகு சாமர்த்தியமாகப் பேசுகிறானே, இவன் சொல்வது மெய்யாயிருக்குமா, அஃதேது? 'ஆராத்தாள் செத்தாலும் பொழுது விடிந்தால் தெரியும்' என்பது போல, இன்னுஞ் சற்றுநேரத்திற்குள்ளே பொய் மெய் எல்லாம் பட்டப்பகலாய்த்தெரியவருகிறது என்று நினைத்துக் காளமேகப்புலவரை நோக்கி'கூரம்பாயினும் வீரியம் பேசேல்' என்பதை அறியாமல், நீ இவ்வளவு வீரம் பேசுகிறையே, அரிகண்டம் பாடுபார்ப்போம்" என்றான். இவர் 'அரிகண்டமாவது என்னை?' என அவன், 'கழுத்திற் கத்தி கட்டிக்கொண்டு' எதிரி கொடுக்குஞ் சமிசைக்கு இணங்கப் பாடுவது தான்; அப்படிப்பாடு மிடத்தில் ஏதாவது தவறினால் அந்தக்கத்தியினாலேயே வெட்டுண்ணவேண்டி வரும்' என்ன, அதற்கு இவர் கை கொட்டிச்சிரித்து, 'இதுதானா அரிகண்டம் என்பது? இத்தனை சுலபமானதை ஒரு விஷயமாகத் தேடிச

---

* இம்மெனல்-வாய்திறவாமையையும், † அம்மெனல்-வாய் திறந்து மூடுகையையும் உணர்த்திய குறிப்புச் சொற்கள்.

சொல்லவந்ததையே, இதிலென்ன அருமையிருக்கிறது? அது நிற்க; யமகண்டம் பாடுகிறதல்லவோ மகா பிரயாசம், அதைக் குறித்துப் பேசுவதுதான் கௌரவம்' என்று சொல்ல, அவன் 'யமகண்டமென்றும் ஒன்றிருக்கிறதா? அஃது எப்படிப்பட்டது?' என்ன, இவர் 'பூமியிற்பதினாறடி நீளம், பதினாறடி அகலம், பதினாறடி ஆழமாகச் சதுரத்திற்குச் சதுரம் ஒரு பெரிய குழிவெட்டி, அதன் நான்கு மூலையிலும் பதினாறடி இருப்புக்கம்பங்கள் நாட்டி, கம்பத்தின் மேல் நாலுபக்கத்திலும் இரும்பினால் நாலுசட்டமும், நடுவே ஒருசட்டமும் போட்டு, நடுச்சட்டத்தில் உறிகட்டி, குழிக்குட் பருத்த புளியங்கட்டைகளை நெருங்க அடுக்கிக் கட்டைக்குள் நெருப்புமூட்டி, அது கனன்றெழுந்து சுவாலித்து எரிந்துகொண்டிருக்க, அந்நெருப்பில் ஓர் ஆளுயரமான இருப்புக் கொப்பரை வைத்து, கொப்பரை நிறைய எண்ணெய்விட்டு, அதில் அரக்கு, மெழுகு, குங்கிலியம், கந்தகம், சாம்பராணிகளை நிரப்பி, அவைநன்றாய்க்காய்ந்து உருகிக் கொதித்துக்கொண் டிருக்க, நான்கு யானைகளைப் பாகர்கள் மதமேற்றிக் கொண்டுவந்து, கம்பத்திற்கு ஒவ்வொன்றாக மலைகளைப்போல நிறுத்திவைத்திருக்க, பின் புறத்தில் வளையம் வைத்து, வளையத்திற் சங்கிலிகோத்து, நயத்த உருக்கிற் கூர்மையாகச் சமைத்துப் பளபள வென்று மின்னும்படி சாணைபிடித்த எட்டுக் கத்திகளைக் கழுத்தில் நாலும், அரையில் நாலுமாகக் கட்டிக்கொண்டு, கத்திகளின் புறத்திலுள்ள சங்கிலிகளை அந்த யானைகளின் துதிக்கையிற் கொடுத்து வைத்து, தான் கொப்பரைக்கு நேராகத்தொங்குகின்ற உறிநடுவில் ஏறியிருந்து, எவரெவர் என்னென்ன சமிசை கொடுத்தாலும் அந்நொடி

யிலே தானே தடையின்றிக் குறித்த கருத்தின்படி இசைத்துப் பாடவேண்டியது. அவ்வாறு பாடும் பொழுது எள்ளளவாவது வழுவுமானுற் சமிசை கொடுத்த வர்கள் யானைமேலிருக்கும் பாகர்களுக்குக் கண்சைகை காட்ட, அவர்கள் யானைகளை மஸ்தகத்தில் அங்குசத்தாற் குத்தி அதட்ட, அவைகள் தமது தும்பிக்கையிற் கொடுக் கப்பட்டிருக்கும் சங்கிலிகளை விசையாயிழுக்க, இழுத்த வுடனே புலவன் கழுத்தும் அரையும் கத்திகளாற்கண்டிக் கப்பட்டுத் தலையொருதுண்டமும், அரைமுதற் காலளவும் ஒரு துண்டமுமாகி, எண்ணெய்க் கொப்பரையில் விழுந்து மாண்டுபோவது, இதுதான் யமகண்டம்' என்ருர்.

காளமேகப்புலவர் இவ்வண்ணஞ் சொல்லக்கேட்ட மாத்திரத்தில் அதிமதுரகவி மனந் திடுக்குற்று, 'அடா அப்பா! யமகண்டமென்பது இப்படிப்பட்ட கோரமான தா? இஃது உள்ளபடி யமகண்டத்திற்கு ஒப்பா யிருப்ப தனுலேதான், இதற்கு இப்பெயர் கொடுக்கப்பட்டதாகக் காண்கின்றது. இவ்வாறு செய்ய யாராலேயாகும்? அசாத் தியம்! அசாத்தியம்!' என்று தனக்குள்ளே எண்ணி, அதிச யித்துப் பின்பு புலவர்பெருமானைப்பார்த்து "நீ சொன்ன யமகண்டம் தகுதியானதுதான்; ஆயினும் சும்மா வாயினு லே டம்பமாகச்சொல்வதனுல் என்னபிரயோசனம்? 'மாடு திருப்பினவனல்லவோ அருச்சுனன்; அதுபோல,சொன்ன படி செய்வதன்ருே கௌரவம்? ஆகையாற் செய் பார்ப் போம்'' என்ருன். இவர் "சபாசு! ஆடவிட்டு நாடகம்பார்க் கிறதுபோல, என்னைச் செய்யச்சொல்லிப் பார்க்கிற தென்னை? நீ முதல்முதல் இந்த விஷயத்தை எடுத்துப் பேசினதனுலும், வெகு நாளாக யாவரு மறிய நடுத்தெரு

விலே 'அதிமதுரகவிராய சிங்கம் பராக்' என்று விருது கூறிக்கொண்டு வருகிறபடியினாலும், செய்யவேண்டிய கடமை உன்னுடையதே. அப்படியிருக்கக் 'குரங்குக் குட்டி கையைத்தேய்க்கிறது' போல, என்மேலே சார்த்தி என்னைத் தூண்டிவிட்டு நீ தப்பித்துக்கொள்ளப் பார்ப்பது சரியோ? இது 'விருது கூறிவந்து செடியில் நுழைகிறது போலாகுமல்லவோ?' என்றார்.

அத்தருணத்தில் அதிமதுரகவியும், அறுபத்துநாலு தண்டிகைப்புலவரும் திருமலைராயன் முன்னிலையில் ஒரு சேரக்கூடி, 'இவன் எதிரிகளை மதியாத துன்மார்க்கனா யிருக்கிற படியினாலே, தந்திரமாக இவனையே, அந்த யம கண்டத்தில் மாட்டி, இவனுடைய கொழுப்பை அடக்க வேண்டும்' என்று தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு, 'அப்படிச் செய்யவேண்டுமென்று எங்களுக்கு ஆவசியக மில்லை; நீயே உன்னை அதிக சமர்த்தனென்று பெருமைப் படுத்தியும், எங்களை இழித்தும் சீட்டுக்கவிபாடி யனுப்பின தனாலும், நாங்கள் சுளுவாக அரிகண்டம் பாடச்சொன்னால், கிணற்றுக்குத் தப்பித் தீயிலே பாய்ந்ததுபோல, அதைவிலக்கி, உன்வாயினாலேயே யமகண்டம் பாடுகிற தைக் குறித்துப் பேசினதனாலும், நீதான் அந்தப்படி செய்யவேண்டும்' என்றார்கள்.

அவர்கள் அப்படிச் சொல்லக்கேட்டுப் புலவர்சிகா மணியானவர், 'கல்வித்திறமும் கவிசாதுரியமு மில்லாத இவர்களை யமகண்டம் பாடச்சொல்லுகிறது, வீரமில்லாத பேடியைப்போருக்கழைக்கிறதுபோலல்லாமல் வேறன்று; அதனால் அதை நாமே செய்துகாட்டி இவர்கள் இறுமாப் பை அடக்கவேண்டும்' என்று நிச்சயித்துக்கொண்டு 'நீங்கள்

வருத்தப்படவேண்டாம்; தலைகீழாய்க் கரணம்போட்டா லும் இஃது உங்களால் ஆகத்தக்க தன்று; நானே செய் கிறேன் பாருங்கள்' என்றுகூறி உடன்பட்டார். அவர் உடன்பட்ட மாத்திரத்தில், 'அவர்கள் இனித் தாமதிக்க லாகாது' என்று யமகண்டத்தைக் குறித்து அவர் முன் னர் சொன்னபடி தழல்மூட்டி, எண்ணெய்க் கொப்பரை வைத்துக் குழிக்கு நாற்றிசையிலும் இருப்புக் கம்பம் நாட்டிக் கம்பத்தின்மேற் சட்டம்போட்டு, நடுச்சட்டத்திற் கொப்பரைக்கு மேலே உறிகட்டிப் பாகர்களால் யானை களை மதமேற்றிக் கொண்டுவந்து கம்பத்திற்கு ஒவ்வொன் றாக நிறுத்தும்படி செய்தார்கள். புலவர்பெருமான் கழுத் திற்கும், அரைக்கும் கத்தி கட்டிக்கொண்டு, கத்திகளின் பின்னுள்ள வளையங்களிற் கோத்திருக்குஞ் சங்கிலிகளை யானைகளின் கையிற் கொடுத்துவிட்டுத் தாம் உறியின் மேலேறி முகமலர்ச்சியுடனே மண்டலித்திருந்து, திருமலை ராயனுடைய அனுமதி பெற்றுக்கொண்டு, அதிமதுரகவி முதலானவர்களை நோக்கி, 'இனி நீங்கள் காலதாமதஞ் செய்யாமல் உங்களிஷ்டப்படிக்குக் கொடுக்கவேண்டிய சமிசைகளைத் தடையின்றித் தாராளமாகக் கொடுக்கலாம்' என்ன, அவர்கள் இவருடைய தைரியத்தையும், முகவிலா சத்தையும் உறியேறிப் பயமின்றிக் கம்பீரமாக வீற்றிருப் பதையுங் கண்டு, "அம்மம்ம! இவனுடைய தைரியந்தான் எப்படிப்பட்டது!" என்று ஆச்சரியப்பட்டு, "நாமிதைமுற்ற முடியப் பார்க்கவேண்டும்" என்றுயாவரும் சமீபத்தில்வந் திருந்து, அவரவர் வெவ்வேறு விதமாய் மிகவும் அருமை யாக ஆராய்ந்து தேடியெடுத்துத் தங்களிஷ்டப்படிக்கெல் லாம் நாநாவிதமான சமிசைகள்கொடுக்க, அவைகளெல்லா வற்றையும் அகிலாண்டநாயகி அனுக்கிரகத்தாற் பொருள்

செய்யாமலும், எவ்வளவேனும் இடர்ப்படாமலும் அநாயாசமாய் அவர்கள் கொண்ட கருத்துக்கிணங்கும்படி சித்திர விசித்திரமாய் நல்ல நயந்தோன்ற அதற்குத்தக்க அலங்காரங்களும் அமைத்து விரைவாகப் பாடினுர்.

---

## VII. கரிநாப்புலவரும், காலகண்டவைத்தியரும்.

தென்னுட்டில் ஒரு ஊரில் மேலைத்தெருவில் கரிநாப்புலவர் என்னும் ஒரு வித்துவானும், கீழைத்தெருவில் காலகண்ட வைத்தியர் என்னும் ஒரு மருத்துவருங்குடியிருந்து வந்தார்கள். இவர்களிருவரும் காட்டுத் தீயும் கடுங்கனலும்போல் அத்தியந்த சகாயமுள்ளவர்கள். அன்றியும் இவர்கள் இயமராஜனது வேலையை, அவனது உத்தரவைப் பெற்றே, பெறுமலோ, அவ்வூர் மட்டிலும், வெகு சுறுசுறுப்புடன் நடத்திக்கொண்டு வருபவரா யிருந்தார்கள். மகாகவிப் புலவர் எப்பொழுதாயினும், எவர்பேரிலாயினும் ஒரு பாட்டுச் சொல்ல நினைத்தாலும் போதும்; உடனே அவர் பாடையிற் பிரயாணமாய் விடுவார். வைத்தியரோ வென்றுல்' நோயாளி முன், தமது மருந்துப் பையைக் கொண்டுவந்து அவிழ்த்து விட்டாற்போதும்; அப்பொழுதே அவன் காடேறிவிடுவான். பெரும்பாலும் இவ்விருவரையு மறியாது அவ்வூருக்குள் இறந்து போனவா இல்லையென்றே சொல்லலாம்.

ஒரு நாள் அவ்வூரில் ஒரு வீதியில் ஒருவன் திடீரென்றிறந்துபோக, அவ்வீட்டார் நெடுங்குரற்பாய்ச்சி அழுது கொண்டிருந்தனர். வாசலிற் சிலர்கூடி மேல் நடக்கவேண்டும் வேலைகளைச் செய்துகொண் டிருந்தனர். பிணப்பறையும், சங்கும் ஒருபால் முழங்கிக்கொண் டிருந்தன. அவ்வி

டத்தில் மேற்புகன்ற புலவரும் வைத்தியரும் அகஸ்மாத் தாய்ச் சந்தித்துச் *சம்பாஷிக்க லாயினர்.

வைத்தியர்—புலவரே வருக.

புலவர்—(அந்த இழவு வீட்டைச் சுட்டிக்காட்டி) எங் கும் புகழ்பெற்ற வைத்யரே! நம் கொலைதரு மருத்துப் பையைக் கொண்டுவந் தவிழ்த்த துண்டோ?

வைத்தியர்—சலமுறு கவிதை யொன்று சாற்றிட நினைத்த துண்டோ?

புலவர்—இலை.

வைத்தியர்—எனிற் சாவிங்கென்ன?

புலவர்—என்னையோ மாயந்தானே.

இப்படியிவர்கள் தம்மாலன்றி மரணமுண்டாகக் காரணமில்லையே என்று சம்பாஷித்துக் கொண்டதைக் கேட்டசிலர், அந்நகரத்தரசனிடஞ்செப்ப, அவன் அவ்விரு வரையுந் தனது சமுகத்தில் வருவித்து, இவ்வூரார் உங்களை வேடமாறுடி வந்த காலதூதர் என்று சொல்வதால், இப் பொழுதே நீங்களிருவரும் இந்நாட்டைவிட்டு அப்பாற் போய்விடுங்கள்' என்றான். என்னவே, அவர்கள் அரசனை வணங்கிக் "காவலரே! உலகத்தில் ஒருவன் ஒருவனைக் கொல்லவாவது, பிழைக்கவாவது செய்ய வல்லமை யுள்ளவ னுவானோ? எல்லாங் காலகதியால் நிகழ்வனவன்றோ?

---

* இச்சம்பாஷணை உணர்த்தும் செய்யுள்.

புலவரே வருக எங்கும் புகழ்பெற்ற வைத்யரே நங்
கொலைதரு மருத்துப்பையைக் கொண்டுவந் தவிழ்த்ததுண்டோ?
சலமுறு கவிதை யொன்று சாற்றிட நினைத்த துண்டோ?
இலையெனிற் சாவிங் கென்னே என்னையோ மாயந்தானே.

'ஆவாரையாரே அழிப்பர்? அதுவன்றிச் சாவாரை யாரே தடுப்பர் ? என மேலோர் கூறியிருத்தலையும் கவனிக்க வேண்டுகிறோம். மேலும் நாங்கள் இந்நாட்டிலேயே பிறந்தோம்; இவ்வூரிலேயே வளர்ந்து வருகிறோம், இப்படியெல்லா மிருக்க 'நாடு துறத்தல்' என்ற தண்டனைக்கு நாங்கள் என்ன குற்றங்களைச் செய்துவிட்டோம். கருணை செய்ய வேண்டுகிறோம்'' என்றனர்.

இவையெல்லாம் கேட்ட காவலன், அவர்களைத்தந்திரத்தால் தண்டிக்கக்கருதி, அவர்களைநோக்கி, "உங்களுக்கு உலகத்தில் நல்லபேர் பரவுகிறவரை நீங்களிருவரும் இக் கட்டடத்திலேயே வசித்து வரல்வேண்டும். உண்டி உடை முதலியன யாமே யளிப்போம்'' என்று சொல்லி ஒதுக்கமான ஒருவீட்டில்அவர்களை வசிக்கும்படிசெய்தான். சுயம்பாகி ஒருவனை அழைத்து ரகசியமாய், "இவ்விருவருக்கும் பகலிலும் இரவிலும் காலவரையறை இல்லாமல் ஒருதினம் பத்து நாழிகைக்கும், மற்றொருநாள் பதினைந்து நாழிகைக்கும் பின்னொரு நாள் இருபது நாழிகைக்கும் இன்னும்பல விதமாகவும், ஆகாரங் கொடுத்து வரக்கடவை'' என, அவனும் அவ்வண்ணமே செய்துவந்தான். சில நாள் செல்லுகையில் புலவர்க்குப் பலமான வயிற்று வலி தோன்றியது. தோன்றவே அவர்சகிக்கமுடியாமல் துள்ளிவிழுந்து புரள ஆரம்பித்தார். அதுகண்டு பொறாத அவரது ஆப்தராகிய பண்டிதர், 'இப்படிப்புலவர் பூலோகத்திற் கிடந்து கஷ்டப் படலாகாது என்று நினைத்தோ, யாதோ' யாமறியோம், தமது மடியிலிருந்து பருத்தமாத்தரை யொன்றெடுத்து' "நண்பரே! இந்த ஒரே மாத்திரையைச்சாப்பிட்டுவிடும்; ஒரு மாத்திரைப் பொழுதில் எல்லாந் தீர்ந்துவிடும்'' என்று

கொடுக்க, உடனே அவரும் அதனை வாங்கி வாயிலே போட்டனர். போட்டதும் அந்த க்ஷணமே அவர் தமக்கு வலிய மருந்தளித்த வைத்தியரின்மேல் அளவுகடந்த சந்தோஷமடைந்தார். அவர் பேரில் அந்நாவலர்,

அவித்திடு மருந்தொன் றாலே அடியனேன் வயிற்று நோவிற்
சவுத்தையும் வெளியாக்கிட்ட தன்மையைஎன்னசொல்வேன்
புவித்தலை யுள்ளா ரும்மைப் போற்றுதல் பெரிதோ தேவர்
குவித்தகை யுடன்வணங்கப் பெறுவிர்நீர் கூறினேனே

எனப்பாடினவுடன் அப்பொழுதே வைத்தியர் மயங்கி வீழ்ந்து வையகத்தின் வாழ்வையிழந்தனர். புலவரும் உட்கொண்ட மருந்தின் வேகத்தால் அவரை விடாது பின் பற்றினர். இப்படி இவரிருவரு மிறக்கவே, அவ்வூர் துறக்கம்போல் விளங்கிச் சுகமுறற்றது.

---

## VIII. பாரி.

வடவேங்கடம் தென்குமரி என்கின்ற எல்லையுட்பட்ட தண்டமிழ் நாட்டகத்து முடியுடை அரசர் மூவராகிய சேர சோழ பாண்டியர் அரசு செலுத்திவந்த காலத்தில், பாண்டியநாட்டில், முந்நூறு ஊர்களையுடைய பறம்புநாட்டுக்குப் பாரி என்பவன் தலைவனாய் இருந்தான். அந்நாடு தற்போதுள்ள பிரான்மலையும், அதைச்சார்ந்த இடமுமாம் எனச் சிலர் கூறுவர். அப்பறம்பு, மிகுந்த அழகும் தகுந்த காவலுமுடையதென்றும், இனிய பைஞ்சுனையைத் தன்னிடத்துடையதென்றும் வேறு பலவாறும் புகழப்பட்டது.

அப்பாரி என்பவன் வரம்பில்லாமல் கொடுத்தவன் ஆதலின், வள்ளல்என்று சொல்லப்படுகிறான். சைவசமய ஆசிரி

யரில் ஒருவராகிய சுந்தரமூர்த்திநாயனுர் 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' என்றுஅவனைச் சிறப்பித்துக் கூறியிருக்கின்றனர். பாரி, ஆய், எழினி, நள்ளி, மலையன், பேகன், ஓரி என்று சொல்லப்படும் கடைஎழுவள்ளல்களின் இவன்முதன்மை பெற்றவன். வேள் என்னும் பழங்குடியில், எவ்வி என்பவனுடைய தொன்மரபிற் பிறந்து சிறப்புற்றவன்.

இப்புரவலனுகிய பாரி, தன்னிடம் வந்த புலவர் பெருமக்களுக்கும், பாணர்க்கும், இரவலர்க்கும் இல்லை என்னுது உள்ளதைக் கொடுத்துப் பெரும்புகழ் எய்தி, நீண்ட பாலைவனத்தின்கண் நீரும், நிழலுமுற்ற பசிய நிலத்தை ஒத்துப் பலரையும் பேணிவந்தான். நடுவூரிற் பழுமரம் பழுத்தாற்போன்று பலர்க்கும் பயன்தரும் இப்பாரி, ஒருநாள், தன் பரிவாரங்கள் சூழத் தேர் ஏறிக் கானத்தை அடைந்தான். அங்கே கொழுகொம்பின்றிக்கீழே கிடந்துவருந்திக்கொண்டிருக்கும் முல்லைக்கொடியைக்கண்டு, 'அந்தோ! பரிதாபம்! ஈதென்னை! இம்முல்லைக் கொடி தனக்குக் களைகண் காணுமல் வருந்துகின்றதே' என்று சிறிதுநேரம்ஆராய்ந்து,'இதற்கியான் என்செய்வேன்?' என்றிரங்கத் தான் ஏறிவந்த இரதத்தை அம் முல்லைக் கொடிப்பக்கத்தில் கொழுகொம்பாக நிறுத்திவிட்டுத் தான் நடந்துபோய்த் தனது அகத்தை அடைந்தனன். இவனைப்புலவர்கள் மாரிக்குச்சமானமாகக் கூறியிருக்கின்றனர். 'பாரி பாரி என்று ஒருவனையே இவ்வுலகோர் புகழுகின்றனர். பாரி ஒருவனே அல்லாமல் இவ்வுலகத்தைத் தாங்குதற்கு மேகங்களுமிருக்கின்றன' என்று ஒரு புலவர் இவனைப் புகழ்ந்திருக்கின்றனர். இவனுடைய சிறப்புக்களைக்கண்டு,தமிழ்நாட்டு மூவேந்தரும் அழுக்காறு

அடைந்து, இவனை வெல்லக்கருதிப் படையெடுத்து வந்து, இவனுடைய இருக்கையை முற்றுகை இட்டனர். அதை அறிந்த அவனுடைய துணைவராகிய கபிலர் என்ற பெயர் வாய்ந்த புலவர்பெருமான் மிகுந்த வருத்தமுற்று "அரசர்களே! நீங்கள் எத்துணைக் காலம் பறம்பை முற்றுகையிடினும், அதனைக் கைப்பற்றல் எளிதன்று. அது உழவரால் உழுது விளைக்கப்படாதனவாகிய நான்கு பயன்களையுடையது. அவற்றுள் முதலாவது, இலையையுடைய மூங்கிலினது நெல்; இரண்டாவது, இனிய சுளையையுடைய பலாவினது பழங்கள்; மூன்றாவது, செழித்த கொடியையுடையதும், ஆழத்தே சென்று பருத்திருப்பதுமாகிய வள்ளிக்கிழங்கு, நான்காவது, நெடியமலையின் கண்ணுள்ள தேன்கூடுகளின் மேல் அழகிய மந்திகள் பாய்தலால் வழிந்தோடுகின்ற தேன். ஆதலால், பாரி உணவிற்கு வருந்தான் நீளத்தாலும், அகலத்தாலும், உயரத்தாலும் அவன்மலை வானத்தை நிகர்க்கும். அவ்வானத்தின் கண்ணுள்ள மீன்களை ஒத்திருக்கும் அதன் கண்ணுள்ள மலர்பூத்த சுனைகள். எத்துணை முயற்சி செய்யினும் நீவிர் வாள்வலியால் அவனை வேறல் அரிது. அவனை வெல்லும் உபாயத்தை யான் கூறுவேன். நல்ல நரம்பொடு கூடிய யாழினையுடைய பாடினி ஆனவள் பின்வர, நீர் ஆடிப்பாடிச் செல்லின் அவனுடைய பொருள்கள் எல்லாம் நம்முடையனவே. முந்நூறு ஊர்களையும் பரிசிலர் முன்னரே பெற்றுச் சென்றனர். இனி நீர் யான் கூறியபடி வந்தாலும், யாமும் பாரியும் உள்ளோம். அன்றியும் குன்றும் உள்ளது. அதனை நமக்குக் கொடுப்பான் என்று" கூறியிருக்கின்றனர்.

முற்கூறியபடி நெடுநாள் முற்றுகை இட்டதனால், ஆண்டுள்ள மக்கள் உணவின்றிப் பெரும்பசியால் வாடினர். அக்காலத்துக் கபிலர் என்ற அவ்வந்தணப்புலவர், பல கிளிகளை வளர்த்து, அரணுக்குப் புறத்தமைந்த விளைநிலங்களிலுள்ள நெற்கதிர்களை ஒவ்வொரு நாளும் கொண்டுவரச் செய்து, ஆங்குள்ள பலரையும் அருத்தினர். பன்னெடு நாளும் பின்னடையாமல், பாரி போர்புரிந்து, முன்னடைவதைக்கண்ட மூவேந்தரும் 'இவனைவெல்லமுடியா' தென்றஞ்சி, ஓடிவிட்டனர். இங்ஙனம், வாள்வலியாலும், தோள்வலியாலும் பொருது வெற்றிகொள்ள முடியாத மூவேந்தரும் அவனை வஞ்சித்துக்கொன்றனர்.

இவனிறந்த பின்னர், கபிலர் பிரிவாற்றாது வருந்தினர்; உயிர் தரித்திருப்பதற்கு அவருக்குச் சிறிதும் மனமில்லை. ஆயினும் இப்பாரியின் அறிவுடைமகளிரைக் காத்தற்கு வேறொருவரும் இல்லாததால் உயிருடன் வாழ்ந்து, அம்மகளிருக்கு அறிவும், அருமையும், பெருமையுமுடைய கணவரைத்தேட நினைத்தனர். அம்மகளிரின் பெயர்கள் அங்கவை, சங்கவை என்ப. அம்மகளிருடன் அப்பறம்பினை விடமுடியாது விடுத்துப் பாரியை நினையுந்தோறும், பறம்பினைப்பார்க்குந்தோறும் மனமிளகிப் பரிதபித்தனர். பாரியின் மகளிர் இருவரும் நல்லிசைப் புலமை மெல்லியலார் ஆகலின், அவர் தமது தந்தை இறந்தமையைக் குறித்து, ஆற்றொணுத்துயருற்றுச் சிலபாடல்கள்பாடியுள்ளனர். அம்மகளிர் இருவரையும் கைக்கொடு, இளவிச்சிக்கோ, இருங்கோவேள் என்ற இருவரிடமும் தனித்தனிச்சென்று, அவரை மணம்புரியும்படி கபிலர் வேண்டினர். அவரை வேட்

பின், மூவேந்தருடைய பகைமையும் உண்டாகுமென்று எண்ணி, அவ்விருவரும் அங்ஙனம் செய்யத் தனித்தனி மறுத்தனர். பின்பு அவ்விரு மாதரையும் பார்ப்பார்ப்படுத்தித் தாம்சென்று பாரியின் பிரிவாற்ருது வருந்திக் கபிலர் இறைவனுடைய திருவடி நிழலை எய்தினர்.

பாரியின் நற்குணங்கள் அவன்றன் மகளிர்பாலும் விளங்கலுற்றன. மழையின்றி உலகம் வறண்டகாலத்தும் தம்மிடம் வந்திரந்த ஒரு பாணனுக்கு மிகுந்த பொன்னைக் கொடுத்து, அம்மகளிர் உதவினர் என்ருல், அவருடைய ஈகையின் சிறப்பை யாம் எங்ஙனம் புகழுவோம்!

---

## IX. இறையனாரும், நக்கீரரும்.

ஆலவாயின் அவிர்சடைக் கடவுள் மனமுவந்தளித்த ஞானப் பலகையினின்று சங்கப்புலவர்கள் தமிழாராய்ச்சி செய்துவந்தனர். அக்காலத்தில் வங்கியசூடாமணி என்னும்பெயர்கொண்டபாண்டியன், தென்கூடலில் அரசாட்சி செய்து வந்தனன். அவன் கூடற்பெருமானிடம் குறையாத பக்தியுடையவன். ஒரு நாள் அவன் தன்மனைவியுடன் தன் கோயிலின் * மேன்மாடத்து நிலாவில் உலாவிக்கொண்டிருந்தான். அப்பொழுது தன்மனைவியின் கூந்தலினின்று நீங்காது ஓங்கி எழுந்த புதிய நறுமணமானது, தென்றல் வழிச்சார்ந்து வீசியதை உணர்ந்து, 'இந்த மணம் மலர்களுக்குள்ளதா, அன்றித் தேவியின் கூந்தலுக்கு இயற்கையாய் உள்ளதா' என்ற ஐயப்பாடு அடைந்தான். உடனே அவன் ஆயிரம் பசும்பொன் எடுத்து, ஒருகிழிகட்டிஅதைச் சங்கமண்டபத்தின்முன் தூக்கி, 'என் மனத்துள் தங்கிய

---

* பூஞ்சோலையில் உலாவினன என றும கூறுவர்.

பொருளின் குறிப்பு அமைந்த செய்யுளைப்பாடிக் கொண்டு வருபவர் எவராயினும், அவர் இதனைப் பெறுக' என்று யாவரு மறியக் கூறினன்.

எத்தனையோ புலவர் பல இனிய கவிகளைப் பாடிவந்தனர். அவற்றில் ஒன்றேனும் அரசன் எதிர்நோக்கியகுறிப்பு அமையப் பெற்றதாயில்லை. ஆதலால், வந்த புலவர் சோக முற்றுத் திரும்பினர். பொற்கிழியும் சங்க மண்டபத்தில் தூங்கிக்கொண்டிருந்தது. இது நிற்க, மதுரையில் எழுந்தருளிய இறையனார்க்குச் சிவமுனி என்ற பிராமணனுடைய புத்திரனாகிய தருமி என்பவன் சைவ ஆகமவிதிப்படி பூசனை புரிந்து வந்தான். அவன் வாய்மையிலும், தூய்மையிலும், ஒழுக்கத்திலும், தெய்வபத்தியிலும்,புத்தியிலும் மேம்பாடுற்றவன். அவனுடைய தாய்தந்தையர் இறந்துபோயினர். ஆதலால் அவனுக்கு வேண்டிய இதங்களைச்செய்வோர் ஒருவருமின்றி வறுமையால் வாடினன். ஒருநாள், அவன் சொக்கர் முன்னின்று "எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்கட்கு எல்லாம்தந்தையும், தாயுமாயிருக்கும் தயாபரனே! தாயும் தந்தையும், சுற்றமும் உன்னையன்றி இவ்வுலகில் எனக்கு வேறுயார் உளர்? நான்பரம தரித்திரபிரமசாரி. பொருளில்லாதவர் இவ்வுலகில் இன்புறுதல் என்றுமில்லை. பரம்பரையாய் என்சந்ததியார் உனக்கு முறைப்படி தொண்டுபூண்டொழுகவேண்டுமென்று அவாவுகிறேன். தேவதேவ! என்பால் மனமிரங்கி, வழுதியின் கருத்தில் அமைந்த விஷயத்தை ஒரு தமிழ்ப்பாடலில் அமைத்துப்பாடி அருளினால் அடியேன் அதைக்கொண்டு அரசனிடம்காட்டி, அப்பொற்கிழியைப்பெற்று,மணம்செய்துகொண்டு சந்ததி அடைந்து

வாழ்ந்திருப்பேன்" என்று கூறிப் பரமன் பாதங்களில் பன்முறை பணிந்திறைஞ்சினன்.

அங்ஙனம் இறைஞ்சிய மறையோனுடைய மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்யவும், தாமோரினிய தமிழ்ப்புலவரெனப் புலப்படுத்தவும் திருவுளங்கொண்ட சொக்கநாதர்,

> கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
> காமம் செப்பாது கண்டது மொழிமோ;
> பயிலியது கெழீஇய நட்பின்
> மயிலியல் செறிஎயிற்று அரிவை கூந்தலின்
> நறியவும் உளவோ நீ அறியும் பூவே

என்ற ஒரு பாடலை ஓரேட்டில் எழுதித் தருமி கையிற் கொடுத்து, "தருமி! இதை எடுத்துக்கொண்டு சென்று, அரசனிடமும், சங்கத்தாரிடமும் காட்டினுல், பொற்கிழி உனக்குக் கிடைக்கும். இது சரியல்லவென்று எவரேனும் சாற்றிய மாற்ற முண்டானல் என்னிடம் வந்து தெரிவி" என்றனர். அந்தணன் தன் துன்பம் அன்றொடு தொலைந்ததென்று துணிந்து, புலவரிடம் சென்று அப்பாட்டைக் காட்டினன். அதனைப் பார்த்த புலவர், தம்முளத்துள் மிக நயந்தனரேனும், வெளிப் படையாக ஒரு வார்த்தையும் கூறவில்லை. தருமி அவர்களிடம் திரும்பப் பெற்றுக் கொண்டு, பாண்டியன்பாற் சென்று அப்பாடலைக் காட்டினன். வேம்பன் முற்றும் படித்துப்பார்த்து, அதன்பொருளை இனி துணர்ந்து, மிகவும் பாராட்டி, 'இக்கவி கூறிய நீர் அப்பொற் கிழிக்கு உரியராகலின், அந்தணிர்! நீர் சென்று அக்கிழியைப்பெற்றுக் கொள்க' என மொழிந்தனன். மிகு இன்புற்ற நெஞ்சுடைய தருமி, தருசங்க

மண்டப மடைந்து உவகையுடன் அக்கிழியை அறுக்கச் சென்றனன்.

அங்ஙனம் பொற்கிழியைக் கொள்ளவந்த தருமியைக் கண்டு பொறாமையுற்ற நக்கீரர் அவனைத்தடுத்து, சொற்பொருள் அறியாப் பார்ப்பானே! இக்கவி குற்றம் உற்றது. நீ போய் இச்செய்யுளைச் செய்து தந்தவனைக் கூட்டிக் கொண்டுவா' எனத் தருமி தன்னுவகை நீங்கப்பெற்றவனாய், இறையனாரது இருப்பிடம் எய்திக் "காலனைக்காலாற் கடிந்தவனே! நீலகண்டனே! நீ தந்த கவியைக்கொண்டு காட்டினேன். அது குற்ற முள்ளது' என நக்கீரர் உரைத்தனர். எம்பெருமானுடைய பாடலுக்குச் சின்னாட்பல்பிணி சிற்றறிவினையுடைய மனிதரில் ஒருவர் குறைகூறியது எனக்கு மிகுந்த வருத்தத்தைத் தருகிறது. இவ்விகழ்ச்சி எனக்கு இல்லை" என்று கூறினன். இறையனார் நக்கீரர் மேற் கோபங்கொண்டு, நெற்றியில் திரிபுண்டரமும், தேசுடைய சட்டையும், சிறந்த தலைப்பாகையும், கைவிரல்களில் மோதிரங்களும் அணிந்துகொண்டு, தமிழ்ப் புலவராய்க், கற்றுச் சொல்லிகள் பின்வர, சங்கமண்டபத்தை அடைந்தனர்.

அன்னப்புள்ளாகிய பிரமனும், வராக உருவெடுத்த திருமாலும் தேடிக் காணமுடியாத சிவபெருமான், சங்க மண்டபத்தில் யாவரும் காணுமாறு நின்றனர். அப்போது இறையனார்க்கும், நக்கீரருக்கும் முற்குறித்த செய்யுள் விஷயமாய்த் தர்க்கம் நடந்தது.

இறையனார்—இச்சங்கப் பலகையில் ஏறி இருந்த தமிழ்ப் புலவர்களில், என் குற்றமில் கவிக்குக் குற்றம் கூறியவன் யாவன்?

நக்கீரர்—இயற்றமிழ்ப் புலவரே! யானே குறை கூறியவன்.

இறையனார்—

*அங்கம் குலுங்க அரிவாளின் நெய்தடவிப*
*பங்கம் படவிரண்டு கால்பரப்பி—சங்கதனைக்*
*கீர்கீர் எனவறுக்கும் கீரனோ என்கவியை*
*ஆராயும் உள்ளத் தவன்?*

நக்கீரர்—

*சங்கறுப்ப தெங்கள் குலம், சங்கரனார்க் கேதுகுலம்?*
*பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ?—சங்கை*
*அரிந்துண்டு வாழ்வோம்; அரனாரைப் போல*
*இரந்துண்டு வாழ்வ திலை.*

இறையனார்—நக்கீர! என்கவியில் என்ன குற்றம் உள்ளது? விரைவில் வெளியிடு.

நக்கீரர்—நன்மகளின் கூந்தலுக்கு இயற்கைவாசனை உண்டென்பது இக்கவியில் வெளிப்படுகிறது. அது தவறாம். அது செயற்கை வாசனை மட்டுமே கொண்டது.

இறையனார்—கீர! நீ கூறிய விஷயம் தெய்வமாதர் கற்றையம் குழற்கும் அடுக்குமோ?

நக்கீரர்—அதற்கு என்ன ஐயம்?

இறையனார்—மரியாதை சிறிது மின்றிப் பிடிவாதத் தாற் பிடிப்புண்டு பிதற்றும் பேதாய்! நீவழிபட்டு வணங்குகிற ஸ்ரீகாளத்தி நாதருடைய சத்தியாகிய ஞானப் பூங்கோதை அம்மையாரின் கூந்தலும் அத்தன்மையதோ?

நக்கீரர்—அதுவும் செயற்கை மணத்ததே ஆகும்.

இங்ஙனம் கூறும் நக்கீரருக்குத் தமது சடாபாரத்தைப் பரமசிவக்கடவுள் காட்டினர்.

நக்கீரர்—தண்டமிழ் வல்ல என்னைச் சடைகொண்டு வெருட்டல் வேண்டாம். நான் கூறிய துண்மை என்பதை இவ்வுலகம் அறியும்.

சடாபாரத்தைத் தரிசித்தும் நல்வழிப்படாத நக்கீரற்கு இறையனார் நெற்றிக் கண்ணைத் திறந்துகாட்டினர்.

நக்கீரர்—நெற்றிக் கண்ணே அன்றி உடல் முழுதும் கண்களைக்கொண்டு என்னைக்காய்ந்தாலும், உமது செய்யுளிலுள்ள குற்றம் குற்றமே. இவ்வுலகத்தில் எப்புலவர்க்கும் அஞ்சாத நான் உமக்கோ பயப்படுவேன்?

இறையனார்—உன்னை அஞ்ஞானம் மூடியிருப்பதால் உனக்கு உண்மை புலப்பட்டிலது. ஆதலாற்றான், இயற்கை மணமுள்ள தேவிகூந்தலும் செயற்கை மணமுடைய தென்றாய்-என்றார்.

நக்கீரர் ஈசனது நுதல்விழி நெருப்பால் வெப்புற்று, அதனைப் பொறுக்க முடியாமல் பொற்றாமரை வாவியில் வீழ்ந்தனர். அவரது தமிழ்ப் புலமையை உன்னி யாதொரு இன்னலும் இழையாது, இறையனார் தம் திருவுருக்கரந்தனர். தருமி குணலைக் கூத்தாடிக்கொண்டு, அப்பொற் கிழியைப் பெற்றுச்சென்று, இல்லறம் நடாத்தற் கேற்ற நற்குண நற்செய்கைகள் வாய்ந்த ஒரு பெண்ணை வதுவை செய்துகொண்டு, இன்புற்று வாழ்ந்தனன்.

நக்கீரர், நெற்றிக்கண் நெருப்புக் கிலக்காகிப் பொற்றாமரை வாவியிற்கிடந்து இடருழப்ப ஏனைய புலவர் எல்

லாரும் கண்டு வருந்தி, 'நக்கீரர் இல்லாத சங்கமானது, மதியில்லாத வானமும், அரசனில்லாத குடியும், தாமரையில்லாத தடமும்போன்று பொலிவிழந்தது; நக்கீரர் செய்ததோ ஈசனால் பொறுக்க முடியாத அபசாரம். ஆயினும் இராவணனுடைய சாமவேத கீதத்தைக்கேட்டு, அவனுக்கருள்புரிந்த நம்பெருமான், நக்கீரர் செய்தகுற்றத்தையும் பொறுக்கும்படி நாம் யாவரும் இறைஞ்சுவோம்" என்று எல்லாரும் ஒன்றுகூடிச் சோமசுந்தரக் கடவுளை நோக்கித் துதித்து நக்கீரரைக் கரையேற்றும்படி மன்றுடினர்.

சிவபெருமான் அப்புலவருடைய பிரார்த்தனைக்கிணங்கி, அங்கயற்கண்ணி அம்மையாருடன் சென்று, நக்கீரரை அருட்கண்கொடு காணவே, அவர் தமது துன்பம்நீங்கப்பெற்று 'கைலைபாதி காளத்திபாதி அந்தாதி' என்ற பிரபந்தத்தைப்பாடி உமாபதியை வணங்கி நிற்க, அத்தேவர் அவரைக் கரையேற்றி, 'நக்கீர! உன் பிழையைப் பொறுத்தோம். நீமுன்போலவே சங்கப்புலவர் கூட்டத்துள் அமர்வாயாக' என்று பணித்தார். அப்பால், சொக்கநாதர் அருள்புரிந்தபடி அகஸ்தியரிடம் இலக்கண உபதேசமடைந்து, சங்கப் புலவருடன் வெகுகாலம் சிறப்புற்று விளங்கித் தம் புகழுடம்பை இவ்வுலகத்தில் நக்கீரர் நிலைநிறுத்தினர்.

---

## X. ஸ்தேவான்.

இற்றைக்குப் பத்தொன்பது நூற்றாண்டுகளுக்குமுன், இறைவனது திருக்குமாரராக, மரியாள் என்னும் அரியாள் வயிற்றில் மானிட உருவுடன் மாண்புற வுதித்துத் தமது அருணிரம்பிய கருணையால், மானிடருடைய மட்டில்லாத பாவத்துக்காகவே தம்மை ஒப்புக்கொடுத்த இயேசுநாதர் வரலாற்றை இவ்வுலகில் தற்போது அறியாதார் சிற்சிலரே யன்றோ? அவர் மதக் கோட்பாடுகள் முதன்முதல் ஆசியாவின் மேற்குப்பாகத்திற் பரவின. அக்கால் எருசலேமி லிருந்த கிறிஸ்தவர்கள் யாவரும் ஒன்றுகூடி ஓரிடத்திற் சேர்ந்து, சமைத்து ஒருங்குண்டு வாழ்ந்தனர். பலர்கூடி ஓரிடத்தில் உணவு கொள்வதென்றால், அங்குப் பல மனக் குறைகள் உண்டாதல் இயற்கையன்றோ? அங்குத் தங்கிய கிரேக்கர் தமது நாட்டுக் கைம்பெண்கள் ஊட்டுப்புரையின் பந்திவிசாரணையில் உபேக்ஷையாக நடத்தப்பாட்டார்க ளென்று முறையிட்டனர்.

அது கேட்ட இயேசுநாதரின் பன்னிரு சீடரும், தமது சீடர்களை அழைத்து, 'அன்பர்களே! ரக்ஷகர் கூறியவற்றை யாவர்க்கும் நாங்கள் போதியாமல் பந்திவிசாரணை செய்து கொண்டிருந்தால், எங்கள் காலம் அவமாகக்கழியும். ஆதலின் உங்களில் உயர்குணமும், நடுநிலைமையும் வாய்ந்த உத்தமரில் எழுவரை அவ்வேலைக்குத் தேர்ந்தெடுத்து வாருங்கள். அவர்கள் அறச்சாலையை மேற்பார்த்து வருவார் களானால், நாங்கள் வைதிக கருமங்களையே கருதிச்செய்து வருவோம்.' என்றார்கள். அங்ஙனமே அங்கிருந்த மாந்தர் அனைவரும் ஊட்டுப்புரையை மேற்பார்த்து வருதற்கு ஸ்தேவான் என்பவனையும், மற்றும் ஆறுபேர்களையும் தேர்ந் தெடுத்து இயேசுநாதரின் பன்னிரு சீடர்முன் சேர்த்தனர்.

அவர்கள் அவ்வெழுவரையும் ஆசீர்வதித்து இட்ட கட்டளையைக் குறைவறப்பார்க்குமாறு கூறினர். அன்றுமுதல் கிறிஸ்தவர்கள் எருசலேமிற் பெருகி இனிது வாழ்ந்தனர்.

முற்குறித்த ஸ்தேவான் என்பவன்கல்வி கேள்விகளின் கரை கண்டவன். சற்சனர்களால் கொண்டாடப்படும் நற்குணங்கள் யாவும் பொற்புடன் உறையுமோர் வித்தகக் களஞ்சியம். பொறை என்னும் குறைவற்ற குணம் குடிகொண்டிருக்கும்கோவில். கடவுள் அடிகளை இடைவிடாது சிந்திக்கும் சீரியன். பிரசங்கம் புரியும் தனது சொல்லாற்றலால் நல்லோர் யாரையும் மகிழ்விக்க வல்லவன். அவன் ஊட்டுப்புரையின் வேலையைப் பார்க்கும் நேரம் தவிர, மற்றைய வேளைகளில் எருசலேமிற் பலதெருக்களிலும்சென்று சத்தியவேதத்தின் உண்மைகளைப் பண்டிதரேயன்றிப் பாமரரும் உணரும்படி இனிது பிரசங்கித்து வருவானாயினன்.

எருசலேம் என்னும் நகரம் ஆசியாவின் மேற்குப் பக்கத்துள்ளது. அது பலவளங்களாற் சிறப்புற்றது. அந்நகரில் யூதர் என்னும் சாதியாரின் கோவில் உலகத்திலுள்ள அற்புதங்களில் ஒன்றெனக் கூறலாம். அங்கு யாத்திரைக்காகப் பலர் செல்வர். தங்கள் யூதகுருவினிடம் உபதேசம் பெற அங்குப் பலர் போவர். அந்நகர் புகழ்பெற்ற வியாபார ஸ்தல மாதலால், தங்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொள்முதல் செய்யவும், தங்கள்பாலிருப்பவற்றை விற்கிரயஞ் செய்யவும் கருதி அங்குச்செல்பவர் பலர். ராஜசேவையையும், பிரபுசேவையையும் எண்ணிச் செல்பவர் பலர். அத்தகைய பல காரியங்களைக் கருதிப் பல நகரங்களினின்றும், பல தேசங்களினின்றும் எப்போதும் ஆங்கு ஆயிரக்கணக்கான சனங்கள் வருவதும் போவதுமாக இருப்பார்கள். யாவருக்கும் ஸ்தேவான் உண்மையான கொள்கைகளை எடுத்துரைக்கலாயினன்.

அவனுடையஉபதேசமொழிகளைக் கேட்கப் பொறுத சத்திய வேத விரோதிகள் செருக்கடைந்து, ஸ்தேவா னுடன் தருக்கம் புரிந்தார்கள். அங்ஙனம் புரிந்த யாவரும் ஸ்தேவானை மறுத்துக்கூறித் தங்கள் கோட்பாடுகளை நிலை நிறுத்த வலியற்றவர்ஆயினர். புலிமுன் புல்வாய்நிற்குமோ? பகலவனுதயத்துப் பனிதான் படருமோ? ஸ்தேவானை மெய்ப்போதத்தால் வெல்லமுடியாதார், பொய்ப்பேதத் தால்வெல்லத்துணிந்தனர். அம்மம்ம! அவர்கள்அவன்மேல் அடாப்பழி சுமத்த ஆரம்பித்தனர்.

'மோசே யென்பவனுக்கும் முழுமுதற் கடவுளுக்கும் முற்றும் மாறான தூஷணைகளை இவன் சொல்லக் கேட் டோம்' என்றுபொய்ச்சான்று புகலத்தக்கோரைஅவர்கள் ஏற்படுத்திக்கொண்டனர்.பிறகு சனங்களையும் மூத்தோரை யும் யூதமதவேதபாரகரையும் தூண்டிவிட்டு, அவனைப் பிடித்து, ஆலோசனை அவையின் அங்கத்தினர்க்குமுன் இழுத்துச்சென்று நிறுத்தினர். அப்போது பொய்ச்சான் றுரைப்போர், 'நீதிபதிகளே! இந்த ஸ்தேவான் இந்தத் தேவாலயத்துக்கும், வேதத்துக்கும் மாறான மொழிகளை வரம்புகடந்து வழங்குகிறான். எங்ஙனமெனில், நசரேயனா கிய இயேசு இந்த ஸ்தலத்தை அழித்து, மோசே நமக்குக் கொடுத்த முறைகள் முழுமையும் மாற்றுவர் என இவன் உரைக்கக் கேட்டோம்' என்றார்கள். ஆலோசனை அங்கத் தவர் யாவரும் அவன்மேற் கண்ணுயிருந்து அவன் முகம் மாசற்ற தேவதூதன் முகம்போல் தேசுற்று விளங்கக் கண்டனர்.

அவன் வேதத்தின் வரலாற்றை ஆதியோடந்தம் விளங்க உரைத்தபிறகு, தன்மேற் சுமத்தின இருகுற்றங்

களுக்கும் ஏற்ற சமாதானம் எடுத்துரைக்கலாயினன். 'இறைவன் உங்கள் குலத்தில் என்னைப் போன்ற தீர்க்க தரிசியை உதிக்கச்செய்வான்.அவருடைய உபதேசங்களைக் கேட்டுய்யுங்கள்'என இசரவேலர்புத்திரரைநோக்கிமோசே சொல்லவில்லையா? அந்தத் தீர்க்கதரிசியாகிய இயேசுகிறிஸ் துவைப்பற்றி நான் பிரசங்கித்தேன். ஆலயம் அழிக்கப்படு மென்று நான் தூஷித்ததாகக் குற்றம் கூறினீர்கள். ஆனால் 'எனக்கு விண்ணுலகம் சிங்காதனமாகவும், மண்ணுலகம் எனது மலரடி வைக்கும் பீடமாகவும் உள்ளன. நான் சர்வ லோக சிருஷ்டிகர்த்தா. சர்வலோக வியாபி. நானிருக்கத் தக்க வீட்டை நீங்கள் எங்ஙனம் கட்டுவீர்கள்? என்று கட வுள் கூறினதாக ஏசையா சொல்லவில்லையா?' என்று இங் ஙனம் கூறி, மேலே பிரசங்கித்துக் கொண்டிருந்தனன்.

இம்மொழிகளைக் கேட்ட போலிச்சபையோர்க்கும், பொய்ச்சான் றுரைப்போர்க்கும், மற்றுமுள்ள புல்லறிவா ளர்க்கும்மனத்தடங்காச் சினமுண்டாயிற்று. அவர்கள்கண் கள் தீப்பொறிபறக்க உறுத்துப்பார்த்துப் புருவத்தை நெரித்து, பற்களைப்படபடவென்று கடித்தார்கள். 'துற விக்கு வேந்தொருதுரும்பு' ஆதலின், ஸ்தேவான், அவர்க ளுடைய வெகுளியை ஒரு பொருட்டாகக் கருதாமல், ஈசு வர பக்தியில் ஈடுபட்டவனாய், அண்ணாந்து பார்த்து 'இறை வனும், அவரது வலப்பக்கத்தில் அவருடைய அன்பார்ந்த புதல்வராகிய இயேசுவும் மோட்சத்தில் இருக்கும் காட்சி யை என்கண்ணாரக் கண்டு களிக்கிறேன்' என்றனன்.

ஸ்தேவான்கூறிய சொற்களைக் கேட்கவிரும்பாத புன் மக்கள் அனைவோரும் தங்கள் காதுகளைக் கைகளால் இறு கப் பொத்திக்கொண்டு, பேராரவாரத்துடன் அவன்மேற்

புலிபோற் பாய்ந்து, நகரத்தின் புறத்தே தள்ளி அவனைக் கற்களால் எறிந்தார்கள். சில சிலைகள் நெற்றியில் தாக்கிப் பதிந்து அவனைப் பதைபதைக்கச் செய்தன. சிலகற்கள் சட்டெனப் பொட்டிற்பட்டு மட்டற்ற மயக்கத்தைக் கொடுத்தன. சிற்சில கற்கள் பற்களைத் தகர்த்தன. சில கண்களிற்பாய்ந்து குருடாக்கிக் குருதியைப் பொங்கச்செய்தன. சில மார்பிற்பட்டு உட்சென்று இருதயத்தில் தைத்து இரத்தப்பிரவாகம் உண்டாக்கின. உடல் முழுதும் கல்லெறியுண்ட ஸ்தேவான் உற்ற இன்னலை எடுத்துரைக்க யாரால் ஆகும்! அச்சமயத்தினும் அப்பாவிகளை அவன்கடுஞ்சொற்களாற் கடிந்தானா? அடித்தானா? சபித்தானா? தன்னுயிர் போவதை உன்னித் தபித்தானா? ஒன்றுமில்லை. தன்னைக் கொல்வதால் அவ் இழிஞர் அருநரகிற்கு ஆளாவார்களே என்றெண்ணி யெண்ணி ஏங்கினான். அதற்காக அவன் முழங்காற் படியிட்டுக் கடவுளைத் தியானித்து 'எம்பெருமானே! இவர்கள் என்னைக் கல்லால் எறிந்து கடுங்கொலை செய்வதாகிய பாவத்தை மன்னித்து, அவர்களுக்கு நல்ல காட்சியும் மோட்சமும் அளிக்குமாறு உம்மை நான் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்' என்று சொல்லிக்கொண்டே இறைவனது இணையடிகளை எய்தினான்.

---

# XI. லப்தஹானி

அல்லது

# பேறழிவு.

சோமசன்மா அரசகுமாரரை நோக்கி "இடருற்ற காலையில் அறிவுகுன்றாதவன், குரங்கு முதலையினின்றும் விடுபட்டாற்போற் பெருந்துன்பத்தினின்றும் மீளுவான்" என, சிறுவர்கள் "அஃதெவ்வணம்? சொல்வாய்" என, ஆசிரியன் சொல்லலுற்றான்:—

கங்கைக் கரையில் நாவன் மரத்தின்மேற் சுமுக னென்னுமொரு வானரம் சிலகாலம் வாசம் பண்ணிக் கொண்டிருக்கையில், அங்கே வந்த ஒரிளைத்த முதலையைப் பார்த்து 'நீ யென்கிருகத்துக்கு விருந்தாக வந்தமையால் உனக்கு நாவற்பழந் தருகின்றேன்' என்று சில பழங் கொடுக்கத்தின்று, அத்தியந்த சந்தோஷத்துடனே தன்னிடத்திற்குப்போய் அன்றுதொடங்கித் தினந்தினம் வந்து நாநா வார்த்தைகள் பேசிக்கொண்டு இரண்டும் அந்நியோந்நியமாய் இருக்கையில், ஒருநாள் முதலை சில கனிகள் கொண்டுவந்து தன்னில்லாட்குக் கொடுக்க, அது தின்று, அக்கனி அமுதம்போ லிருக்கக்கண்டு தன்னுடைய கணவனைப்பார்த்துப் 'பிராண நாதா! இந்தத் தித்திப்பான கனிகளெங்கிருந்து கொண்டுவந்தாய்?' என, ஆண் முதலை, 'சுமுக வானர னென்னும் என் நண்பன் எனக்கு நாடோறுங் கொடுக்க நான் அங்கேதானே யவற்றைப் புசித்து வந்தேன்: இன்றைக்குத் தின்று மிகுந்ததை யுனக்குக் கொணர்ந்தேன்' என, இம்மொழிகளைக் கேட்டுப் பெண் முதலை 'இத்தீங்கனி தின்பவன் ஈரல் அமிர்தத்திற்கொப்பா யிருக்கும்; அதைக்கொணர்ந்து எனக்குக்கொடு; அதனால்

நான் மூப்புச்சாக்காடுகள் இல்லாமல் உன்னோடு நெடுங்காலஞ் சுகித்திருப்பேன்' என, இதைக்கேட்ட முசலி 'எனக்குயிருக்குயிரா யிருக்கின்ற நட்போனாகிய வானரத்துக்கு நீயேன் இந்தத் தீங்கு நினைக்கின்றாய்?' என, அது 'நான் உனக்கு அகத்தியமாயிருந்தால், அதனீரலைக் கொணர்ந்து, கொடு;இல்லாவிட்டால் நானுயிர் வைத்துக் கொண்டிரேன் என,ஆண்முதலை'காதலியே! சகோதரனினுமித்திரன் அதிகமாதலால் அவனைக் குறித்து நீ அடம் பண்ணவேண்டாம்' என்று மோவாய்க்கட்டையைப் பிடித்துவேண்டிக் கொள்ள, பெண்முதலை 'நீ யென்றைக்கும் என்பேச்சுக்குக் குறுக்குச் சொன்னதில்லை; இன்றைக்கு மாத்திரமெனக்குக் குறைச்சற்பண்ணுகின்றாய்; ஆதலால் இதோ நான் சீவனை விடுகின்றேன்' எனப் பிடிவாதஞ்செய்ய, கரா பெண்ணின் நிச்சயத்தை யறிந்து 'அச்சுமுகன் யான் கொல்லக்கூடாதவனா யிருக்கின்றான்; நீயோ பிடித்ததை விடாமலிருக்கின்றாய்; ஆதலால் நானிருதலைக்கொள்ளி எறும்பு போலாயினேன்' என்று இங்ஙனஞ்சொல்லிச் சுமுகனிடத்திற்குப் போயிற்று. அப்போது சுமுகன், 'நண்பனே ! இன்றைக்கேன் விசனமாயிருக்கின்றாய்?' என, முதலை 'மற்றொன்றுமில்லை; உன் மச்சினிச்சி யென்னைப்பார்த்துத் 'துஷ்டா! நன்றிகெட்டவனே! நீ யாராலே சீவனம் பண்ணுகின்றனையோ, அவனை யொருநாளைக்காயினும் நமது வீட்டிற்கு அழைத்து வந்து விருந்திடவேண்டாமோ? அவன் வீட்டுக்கு மாத்திரம் வெட்கமில்லாமற் போய்ப்போய் நல்ல பழங்களைத் தின்னுகின்றனையே' யென்று திட்டிக்கோபித்தாள்; ஆதலால் நீ யென் வீட்டுக்கு வா; உன்னைக் குறித்துப் பலபல பதார்த்தங்கள் தேடி வைத்துக்கொண்டு வழிபார்த்து உட்கார்ந்துகொண் டிருக்கிறாள்' என, வானரம், 'நண்பனே ! என்னால் தண்ணீரில் வரக்கூடாது; நீ யென்

பிரியமுள்ள மச்சினியை யிங்கே கூட்டிக்கொண்டுவா' என, மகரம், 'சுமுகனே! நான் கங்கைக்கரையி லிருக்கின்றேன், நீயென் முதுகின்மேல் உட்கார்ந்து கொண்டுவா; நோவா மற் கொண்டுபோவேன்' என, அதன்கண் நம்பிக்கை வைத் துக் குரங்கு அப்படியே உட்கார்ந்து கொண்ட மாத்திரத் தில், முதலை தண்ணீரிற் குதித்துப் போகையில் வானரம் 'எனக்கு அச்சமாயிருக்கின்றது; மெள்ள மெள்ள நட' என் றது; இதைக்கேட்டு முதலை 'இப்போது சுமுகன் நம்முடைய சுவாதீனத்தி லிருக்கின்றான்; இனி யிவனுக்கு நம்கருத்தை வெளியிடுவதற்குக் குறை யென்னையிருக்கின்றது? உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமோ?' என இங்ஙனம் தனக்குள் தீர்மானித்துக்கொண்டு, 'மித்திரா! உன்னிஷ்ட தேவதையை நினை; என் பெண்சாதியின் பிடிவாதத்தால் உன்னைக் கொண்டுபோகின்றேன்; நீ 'நேற்றுக்கொடுத்த நறுங்கனிகளை என் மனைவி தின்றதன்மேல் 'இத்தன்மை யான தீங்கனியைத் தினம் தின்னுகின்ற பாக்கியவானீரல் கேவலம் அமிழ்தத்தை யொத்திருக்கும்; ஆதலால் நீயவ னீரலை யெனக்குக்கொணர்ந்து கொடாவிடில் நான் பிரா ணனை வைத்திரேன் என்றாள். அதைக் குறித்துத்தான் உன்னைக் கொண்டுபோகின்றேன்' என்றது.

அதைக்கேட்டு வானரம் 'ஒகோ! இப்படியென்று எனக்கு முன்னரே தெரிந்திருந்தால் அந்த மரத்தின் மேலொளித்து வைத்திருக்கின்ற அந்த ஈரலை யுனக்கு அங் கேயே கொடுத்திருப்பேன் வெற்றிருதயத்தோ டிருக்கை யில் என்னைவீணாகக் கொடுவந்தாய் எனக்கிலேசப்பட,அப் போது மகரம் 'என்பிராணமித்திரா! அதைக் கொடுத்தால் அவள் சந்தோஷமாவாள்' என்று சொல்லி வானரத்தை அதிசீக்கிரத்தில் முன்னிடத்திற் கொண்டுவந்து விட்ட

வுடனே, வானரங் குதித்து மரத்தின்மேல் ஏறிக்கொண்டு, ‘இன்றைக்குக் காலன் கையிலிருந்து விடுபட்டேன்’ என்று எண்ணிக்கொண்டிருக்கையில், முதலை ‘மித்திரா! ஈரலைச் சுருக்காய்க் கொடு; உன் அண்ணியாருக்குக் கொடுத்து விட்டு வருகின்றேன்’ எனக்கேட்க, வானரம் நகைத்து, ‘மூடா! துஷ்டா! ஈரலுடம்பை விட்டிருக்குமோ? அஃதிருக்கட்டும், நீ விசுவாச காதகனுதலால், இங்கிருக்க வேண்டாம்; சீக்கிரத்திற் புறப்பட்டுப்போ:உன்னைப்பார்க்க என் கண்கள் நாணுகின்றன’ என்று இங்ஙனஞ் சுமுகன் சொன்னவுடனே, முதலை பச்சாத்தாபப்பட்டு, ‘நான் இவனுக்கு வழியிலுண்மைசொல்லி யிழந்தேன்; இப்போது மறுபடி விசுவாசம் வரப்பேசி யிவனைக் கொண்டுபோக வேண்டும்’ என்று ஆலோசித்து, ‘மித்திரா ! நானுன்னைப் பரீக்ஷிக்கலாமென்று இவ்வாறு சொன்னேன்; மேலும் உலகத்தில் நடவாத உன்பேச்சை நிசமென்று எண்ணித் திருப்பிக்கொண்டுவரவில்லை; ஈரல் சரீரத்தை விட்டு வேறிடத்திலிராதென்பது சிறு பிள்ளைக்குந் தெரிந்ததுதானே;நானிது விளையாட்டுக்குச் செய்தேன்; ஆதலால் நீ என் வீட்டுக்குக் கிலேசமும் பயமுமில்லாமல் வா ; உன் பொருட்டு என் பெண்டாட்டி வழிநோக்கிக் கண் பூத்துப்போகக் காத்துக் கொண்டிருப்பாள்’ என, சுமுகன் ‘பசித்தவனது விசுவாசத்தில் நம்பிக்கை வைக்கலாகாது; நான் மீண்டும் உன் வீட்டுக்கு வரேன்’ என, இதைக்கேட்டு முதலை, ‘நீ வராவிடில் எனக்கு நன்றிமறந்தமை சம்பவிக்கும்; ஆதலால் பட்டினியிருந்து உன்னைக்குறித்து இங்கேயே பிராணனை விடுவேன்’ என்றது.

கேட்டவானரம்,‘நீ என்னைக்கொல்ல விரும்புகின்றாய்’ என, முதலை ‘எவன் தன் பிரயோசனத்தைவிட் டுள்ளதைச்

சொல்லுகின்றனே அவன் துன்பமடைவான்' என,இப்படி முதலையின் பேச்சைக்கேட்டுச் சுமுகன்,'ஸ்திரீகளின் கிருத்திருமம் ஒருவருக்கும் தெரியாது. ஆகையால்அவர்கள் விசுவாசத்தை நம்பலாகாது. அன்றியும், மாதர்களுடனே வீணாகப் பேசலும் ஆகாது. இது நிற்க; நீ யவளைக் குறித்து என்னைக்கொல்லவிருந்தாய். இஃது உன் குற்றமன்று. விசுவாச காதகம் பண்ணுதல் உன் சாதிக்கே இயல்பாயிருக்கின்றது. அது சாதுக்களின் சேர்க்கையாலும் குணமாகாது. மேலும் துஷ்டர்கட்கு உபதேசித்தும் பயனில்லை' என்று இப்படிப் பேசிக்கொண்டிருக்கையிற் சலத்திலிருந்து ஒரு சலசரம் வந்து 'உன் மனையாள் எதிர் பார்த்துக் கொண்டிருந்து பட்டினியாலிறந்தாள்' என, அந்த நாராசம் செவியிலேறினவுடனே முதலை 'நான் கொடியோனாதலின், இத்தன்மைய இடரில் அகப்பட்டேன்; முதலில் நண்பனுக்குப் பொல்லாதவனாயினேன்; இரண்டாவது மனைக்கிழத்தியு மிறந்தாள்' வீடுங் காடாயிற்று; இல்லக்கிழத்தி யில்லாத இல்லம் சுடலையன்றோ? ஆதலால் மித்திரா! என் பிழையைப் பொறுத்துக்கொள்; நானுனக்குத் துரோகம் நினைத்ததனால் தீக் குதிக்கின்றேன்' என, இதைக்கேட்டு வானரம் 'எவள் பேச்சினால் நீ கொலைத் தொழிற்கு ஏற்பட்டனையோ அவள்சாவைக் குறித்து இப்போது கிலேசித்து உயிர்விட நினைக்கின்றாய்; அப்படிப்பட்ட துர்க்குணியின் சாவுக்குக் களிக்கவேண்டும் அந்த துஷ்டையைக் குறித்துச் சேர்க்கமுறாமல், 'முதலாய்! நீ யுன் சாகைக்குப்போ' என, மகரம் தன் வீட்டுக்குப் போனவிடத்தில் அங்கே வேறொரு முதலையிருக்கக்கண்டு, 'நம்மிடத்தையும் ஒருவன் கைக்கொண்டான். இதற்குச் சாம தான பேத தண்டங்களில் ஒருபா

யம் செய்வதைக் குறித்து நம்முடைய சிநேகிதனைவிடச் சொல்லுகின்றவர்களில்லை; அவனையே வினவவேண்டும்" என்று உறுதிசெய்து, மீண்டும் நாவன்மரத்தண்டை வந்து சுமுகனைப பார்த்து, 'மித்திரா பட்டகாலிலேபடுங் கெட்ட குடியேகெடும் என்றாற்போல, என் அபாக்கியத்தினால் என் வீட்டையு மொருவன் பிடுங்கிக்கொண்டான்; இனி நானென்ன செய்வேன்? என்று முறையிட, வானரம், 'நன்றி கெட்டவனே! எனக்குப் பொல்லாங்கு தேடின நீ மறித்தும் முட்டாட்டனமாய் என்னிடத்துக்கேன் வந்தாய்? மூடனுக்கு உபதேசித்தால் அவன் வீடுடை யவனை வீடிழக்கப் பண்ணுவான். ஆதலாற் கீழானோர் கட்கு உபதேசிக்கலாகாது' என முதலை, 'அன்பனே! நான் குற்றவாளி என்பது மெய்யே; ஆயினும் பழைய சிநேகி தனாதலால் கேட்கின்றேன்" என, வானரம் 'நீ யங்கே போய்ப் பகையாளியோடு போர்செய்; மடிந்தாற் சொர்க்க மடைவாய்; வென்றால் வீடடைந்து சுகமுறுவாய்; ஆத லால், நீ அம்மகரத்தைக் கொன்று உன் வீட்டிற் சுகமாயிரு வேறொரு தேயத்திற் சௌக்கிய மெல்லாங் கிடைக்குமாயி னுந் தனக்குச் சிநேகன் அங்கொருவனும் இல்லாவிட்டால் தீங்குகள் அனுபவிக்க வரும்" என, முதலை அவ்வார்த்தை களைக் கேட்டுப்போய் அவ்வண்ணமே எதிரியுடனே போர் செய்து, தன்வீட்டை மீட்டுக்கொண்டு, அங்கேயே வாழ்ந் திருந்தது. ஆதலாற் பராக்கிரமத்தினாற் பாக்கியம் வழி தேடி வந்தணைகின்றது.



84788

# இந்நூலாசிரியர் எழுதிய வேறு நூல்கள்.

## உயர்தர கலாசாலை வகுப்புகட்கு உரியன.

### துரைத்தனத்தார் அங்கீகரித்தவை.

1. **புதிய வாசக புஸ்தகம்**—உயர்தர கலாசாலை வகுப்புகட் ...ரியதென்று துரைத்தனத்தாரால் ஒப்புக்கொள்ளப் பெற்றது. ...ன்னை 'தமிழ் லெக்ஸிகன்' சங்கத்தலைவர் கனம் J. S. சாண்ட் ... துரை அவர்கள் எழுதிய முகவுரையுடன் வெளிவந்துள்ளது. விலை அணு 10.

2. **செந்தமிழ் வாசகத்திரட்டு-இரண்டாம் பாகம்** அணு 10.

3. **தமிழ்ச் செய்யுள் திரட்டு-முதற்பாகம்**—IV பாரம் A ...oup பாடத்துக்குரியது. தேவாரம், பெருந்தேவனார் பாரதம், ...டதம், நான்மணிக்கடிகை, பெரியபுராணம், நன்னூல், ...சேலோபாக்கியானம், நாலடியார், முதுமொழிக் காஞ்சி, பரஞ் ...ோதியார் திருவிளையாடல் முதலிய நூல்களினின்று தேர்ந்தெடுக் ...பட்ட 11 செய்யுட் பாடங்களும், அவற்றின் ஆசிரியர் வரலாறு, ...ரும்பதவுரை, இலக்கணக் குறிப்புகளும் கூடியது. அணு 5.

4. **தமிழ்ச் செய்யுள் திரட்டு—இரண்டாம் பாகம்** V பாகம் Group பாடத்துக்குரியது. வில்லி பாரதம், திருவாலவாயுடை ...யார் திருவிளையாடல், சிறுபஞ்சமூலம், ஏலாதி, கம்பராமாயணம், ...மொழி, நாலாயிரப்பிரபந்தம், தேவாரம், அரும்பொருட்டிரட்டு ...ன்னும் நூல்களினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட 9 செய்யுட்பாடங் ...களும், அவற்றின் ஆசிரியர் வரலாறு, அரும்பதவுரை, இலக்கணக் ...குறிப்பு முதலியவைகளும் சேர்ந்தது. அணு 6.

### உப-பாடமாக வைக்கத் தகுந்தவை.

5. **கம்பர் சரித்திரம்**—இப்புலவர் சரித்திரத்தை முழுதும் ...லவகை ஆராய்ச்சியுடன் வெளியிடும் நூல். அணு 10.

6 **கோமதி கோகிலமாலது**— ஆசார சீர்திருத்தத்தைப் ...பாதிக்கும் சிறந்த தமிழ் நாவல். இனியதமிழில் எளிய நடையில் ...ழுதப்பெற்றது. கலாசாலைப்பாடமாகவைக்கப்பெற்றது. அணு 12.

7. **குமணன்**—தமிழிடத்துள்ள அபிமானத்தாலும், ஈகை ...யாலும், தன்னுயிர்க்கொடை அளித்த உத்தமனாகிய குமணன் வர ...லாற்றை நாடக ரூபமாகப் பல சங்கீதப் பாடல்களுடன் எடுத் ...துரைக்கும் நூல். அணு 6.

8. **பாண்டிய தேச நாயக்க மன்னர் வரலாறு.** அணு 6.

**இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன்,**

புஸ்தக வியாபாரம், மதுரை.

# By the same author.

All approved by the Text Book Committee, Madras.

---

## For Use in High Schools.

| | |
|---|---|
| A New Tamil Reader-Prose and Poetry ... | As. 10 |
| Literary Selections from Tamil Poetry & Prose, Part II | As. 10 |
| Tamil Peetical Selections, Part I. With Introduction, Lives of Authors, etc. | As. 5 |
| Tamil Poetical Selections, Part II. With Introduction, Lives of Authors, etc. | As 6 |

## Historical Books for Non-detailed Study.

| | |
|---|---|
| Kambar Charitram ... ... ... | As. 10 |
| A Short History of the Pandya Kingdom. under the Naick rulers—Illustrated. | As. 6 |
| The Story of Thirumalai Naiker—Illustrated ) | As. 2 |

## Other Prose Books.

| | |
|---|---|
| The Mystery of Kokilam—A Tamil Novel ... | As. 12 |
| Kumanan—A Tamil Drama ... ... | As. 6 |
| The Embassy of Krishna. ... ... | As. 2 |

## For use in Elementary Schools.

| | |
|---|---|
| A New Geography of the Madura Dist. Illustrated. | As. 4 |
| A New Geography of the Tinnevelly Dist. ... | As. 4 |
| A New Geography of the Ramnad Dist. ... | As. 4 |
| A New Geography of the Trichy Dist. Illustrated. | As. 4 |
| The Story of Mangammal ... ... | As. 1 |

**E. M. GOPALAKRISHNA KONE,**

*Book-seller & Agent for Govt Publications,*

*MADURA.*